வல்லவன்; பன்னருஞ் சாமகீதம் பாடி ஈசனது இன்னருளைப் பெற்றவன். இசைக் கலையில் இத்துணை ஏற்றம் வாய்ந்த இராவணன் தமிழிசையிற் புகழ் பெற்ற முனிவரிடம் தன் கைவரிசையைக் காட்ட ஆசைப்பட்டான். அவன் கருத்தறிந்த தமிழ் முனிவர் தம் இசைக் கருவியாகிய யாழை மீட்டினார்.

மன்னனுக்கும் முனிவருக்கும் இசைப்போட்டி நிகழ்ந்தது. முதலில் அரக்கர்கோன் அருமையாகப் பாடினான். அதன்பின் அகத்தியர் தமிழிசையை யாழில் அமைத்துப் பாடினார். அவர் பாட்டொலி கேட்ட பறவைகளும் விலங்குகளும் பரவசமுற்றன. எதிரே நின்ற கரும் பாறை இளகிற்று. அரக்கர் கோன் உள்ளம் உருகிற்று. அந்நிலையில் அகத்தியரை நோக்கி, 'என் உயிரினும் இனிய இசை ஞானியே! உமக்கு என்ன வேண்டும்?' என்றான் இராவணன். தமிழ் நாட்டைப் பாதுகாப்பதற்கு ஏற்ற சமயம் வந்துற்றது என்று அறிந்த முனிவர், 'ஐயனே! இந்நாட்டிலுள்ளார் எவரையும் நீ துன்புறுத்தாமல் இருக்க வேண்டும்' என்றார். அதற்கிசைந்த இராவணனும் பொதியமலையை விட்டகன்றான். அன்று முதல் தமிழகத்தில் ஆட்சி செலுத்தும் கருத்தை அடியோடு விட்டொழித்தான் அரக்கர் கோமான். 'தமிழிசையின் வெற்றியால் அரக்கர் அச்சம் அகன்றது' என்று தமிழ் மக்கள் அகங்களித்தார்கள். இச் செய்தியைத்* தொல்காப்பியப் பாயிர வுரையாலும் மதுரைக் காஞ்சி யுரை

* 'பொதியின்கண் இருந்து இராவணனைக் காந்தருவத்தால் பிணித்து இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கினார் தமிழ் முனிவர்' என்பது தொல்காப்பியப் பாயிர உரை.

யாலும் அறியலாம். இவ் வரலாற்ருல் தமிழ்நாட்டை முன்ஞளில் அபயமளித்துக் காத்தது இசைத் தமிழே என்பது இனிது விளங்கும்.

இவ்வாறு தமிழ்நாட்டைப் பாதுகாத்த இசைத் தமிழ், கடல் கடந்து இலங்கைக்குச் சென்று வெற்றி பெற்ற செய்தியும் அறியத் தக்கதாகும். இன்று இலங்கையில் தமிழர் வாழும் நாடும் நகரமும் யாழ்ப் பாணம் என்னும் அழகிய பெயரைப் பெற்றுள்ளன. யாழ்ப்பாணர் என்பவர் இன்னிசைக் கருவியாகிய யாழைக் கையிலேந்தித் தமிழ்ப் பாட்டிசைக்கும் இசைவாணர். யாழ்ப்பாணர் என்ற குலத்தார் இப் பொழுது தமிழ்நாட்டில் இல்லையென்ருலும், முன் ஞளில் அவர் சிறந்து வாழ்ந்தனர் என்பதற்கு ஒரு சான்ருக நிற்பது யாழ்ப்பாணம் என்னும் நன்னகரம்.

பழந்தமிழ்க் குடிகளாகிய பாணரைத் தமிழ் நாட்டுப் பெருநில மன்னரும் குறுநில மன்னரும் ஆதரித்தார்கள் ; வரிசை அறிந்து அவர்க்குப் பரி சளித்தார்கள். சோழ நாட்டு மன்னனுகிய கரிகால் வளவனும் தொண்டை நாட்டில் ஆட்சி புரிந்த இளந் திரையனும் குறுநில மன்னனுகிய நல்லியக்கோடனும் இசைவாணர் குலத்தை ஆதரித்த செய்தி பத்துப் பாட்டிலே கூறப்படுகின்றது. சோழ நாட்டின் தலை நகராகிய காவிரிப்பூம் பட்டினத்தில் பெரும்பாணர் குலம் சிறப்புற்று வாழ்ந்த தென்பது சிலப்பதிகாரத் தால் நன்கு அறியப்படுகின்றது. எனவே, முற்காலத் தில் தமிழிசையை இசைத் தொழிலுக்காகப் பயின்ற

வர் பாணர் குலத்தவரே என்பதும், அவர்களை ஆதரித்த பெருமை தமிழ்நாட்டு மன்னர்க்கு உண்டு என்பதும் பண்டைத் தமிழ் நூல்களால் விளங்குவன வாகும்.

சங்க காலம் என்று சொல்லப்படுகின்ற பழங்கால நூல்களில் வரும் இசைப் பாடல்கள் இயற்கை நலங் களையும் இறைவன் பெருமையையும் அழகுற எடுத் துரைக்கின்றன. பரிபாடல் என்னும் பழைய இலக்கிய நூலில் வைகை ஆற்றைப் புகழ்ந்து பாடிய பாடல்கள் பல உண்டு. தமிழ்நாட்டின் நல்லணியாகத் திகழும் காவேரி ஆற்றை இளங்கோவடிகள் இசைப் பாட்டால் புகழ்ந்து வாழ்த்தியுள்ளார்.

'' பூவார்சோலை மயிலாடப் புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர்மாலை அருகசைய நடந்தாய் வாழி காவேரி ''

என்ற இசைப் பாட்டைக் கேட்கும் பொழுது தமிழ்ச் செவிகளில் இன்பத் தேன் வந்து பாய்கின்றதன்றோ?

இவ்வாறு பாணர்களும் புலவர்களும் வளர்த்து வந்த தமிழிசையைச் சைவ சமய நாயன்மார்களும் வைணவ சமய ஆழ்வார்களும் பக்தி நெறியைப் பரப்பு வதற்குப் பயன்படுத்தினார்கள். ஈசனைப் பாடிய தேவாரத் திருப்பாசுரங்கள், இறைவன் திருவருளை இன்னிசையால் எளிதிற் பெறலாம் என்னும் உண்மையை எடுத்துரைக்கின்றன. இன்னிசை பாடுவார் பெறும் பயனைத் திருஞான சம்பந்தர் குறித்துள்ளார்.

'' பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன் ''

என்பது அவர் திருவாக்கு. 'இசைத் தமிழால் வழி படும் அடியார்க்கு ஈசன் மண்ணுலக வாழ்வும் தருவான்; விண்ணுலக வாழ்வும் தருவான்' என்பது இப் பாட்டின் கருத்து. திருநாவுக்கரசர் என்னும் பெரியார் கடுமையான சூலை நோயுற்றுத் துடிக்கும் பொழுது இறைவனை நினைந்து, "ஐயனே!

தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்
நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன்
உன்நாமம் என்நாவில் மறந்தறியேன்"

என்று மனம் உருகிப் பாடினார். எனவே, இறைவன் அருளைப் பெறுவதற்குத் தமிழிசையே சிறந்த சாதனம் என்னும் கொள்கை தமிழ்நாட்டில் பரவிற்று. சிவனடியார்களும் திருமாலடியார்களும் அருளிய அருட்பாடல்கள் நாடெங்கும் பரவிய பான்மையால் பக்தி வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய் நின்றது. இறைவனுக்குத் திருக்கோவில் கட்டும் பணியிலே ஈடுபட்டனர் தமிழ் மன்னர். தேவாரப் பாடல்பெற்ற ஸ்தலங்களும், ஆழ்வார்களின் மங்களா சாசனம் பெற்ற திருப்பதிகளும் பொதுமக்களின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. 'கோவில் இல்லா ஊரில் குடி இருத்தல் ஆகாது' என்னும் கொள்கையும் எழுந்தது. இங்ஙனம் ஊர்தோறும் எழுந்த கோவில்களில் தெய்வத் தமிழ்ப் பாடல்களை நாள் தோறும் பாடுதற்குரிய முறை வகுக்கப்பட்டது. சிவாலயங்களில் தேவாரம் முதலிய திருமுறைகளை விண்ணப்பம் செய்யும் இசைவாணர் ஓதுவார் என்று பெயர் பெற்றனர்.

"காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நல்நெறிக்கு உய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது
நாதன் நாமம் நமச்சி வாயவே"

என்று திருஞான சம்பந்தர் பாடிய தேவாரத்தில் 'ஓதுவார்' என்னும் சொல் ஈசன் புகழைப் பாடுவார் என்று பொருள்படுகின்றது. வழிபாட்டுக் காலங்களில் ஓதுவார் என்னும் தமிழிசைவாணர்கள் பக்திச் சுவை நிரம்பிய பாடல்களைப் பண்ணோடு பாடிய பொழுது அவற்றை அன்பர்கள் செவியாரப் பருகினர்; உள்ளம் உருகினர். எனவே, ஆதியில் அரசரால் ஆதரிக்கப் பெற்ற இசைத் தமிழ், இடைக் காலத்தில் ஆலயங்களின் ஆதரவுபெற்று வளர்ந்தது.

இயற்கையோடு இசைந்து இன்புறும் தன்மையினராகிய தமிழ் மக்களது வாழ்க்கையின் பல துறைகளிலும் கலந்து இசைப் பாட்டு வளமுற்றது. வேளாண்மை என்னும் பயிர்த்தொழில் இந்நாட்டிலே தொன்று தொட்டு நிகழும் பழுதற்ற தொழிலாகும். அத் தொழிலை மேற்கொண்ட பணியாளர் நெற்றி வேர்வை நிலத்தில் விழப் பாடுபடும்போதும் நல்ல பாட்டிசைத்தார்கள். கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்து நிலத்திலே பாய்ச்சும்பொழுதும் ஏற்றப் பாட்டு; நாற்று நடும்பொழுது நடுகைப் பாட்டு; அறுப்புக் களத்தில் ஏர்க்களப் பாட்டு; ஆக பயிர்த் தொழிலாளரது பாட்டு பலவாகும். இன்னும் குறிஞ்சி நிலத்திலே குறத்திப் பாட்டு ஒலிக்கும். மருத நிலத்திலே பள்ளுப் பாட்டு முழங்கும். பெண்கள் பந்து

விளையாடும் பொழுது பாட்டு; அம்மானை ஆடும் பொழுது பாட்டு; தாலாட்டும் பொழுது பாட்டு. சுருங்கச் சொல்லின் தமிழ்நாட்டில் பாட்டில்லாத பணியே இல்லை என்பது மிகையாகாது.

போர்க்களத்தைப் பற்றிய இசைப் பாட்டும் இந் நாட்டில் உண்டு. அவற்றுள் தலை சிறந்தது 'கலிங் கத்துப் பரணி' என்னும் தாழிசைப் பாட்டாகும். தமிழ் நாட்டுப் பெரு வேந்தனாகிய குலோத்துங்க சோழன் கலிங்க நாட்டின்மேல் படையெடுத்து வாகை மாலை சூடிய வரலாற்றைப் புனைந்துரைப்பது கலிங்கத்துப் பரணி. பரணி பாடிய செயங்கொண்டான் என்னும் கவிஞனைக் குலோத்துங்க சோழன் பரிசளித்துப் பாராட்டினான். அம் மன்னன் தமிழிசையில் மிகவும் ஈடுபட்டவன்; போர் ஒழிந்த காலங்களில் தமிழ் இசை வாணரொடும் கலைவாணரொடும் பழகி இன்புற்றவன். அவனுடைய தேவியர்களில் ஒருவர் 'ஏழிசை வல்லபி' என்னும் சிறப்புப் பெயர் பெற்று விளங்கினார். இன் னிசையின் சுவை யறிந்த மன்னவன் இசைக் கலையின் நயந்தெரிந்து ஒரு நங்கையை மணந்து, ஏழிசை வல்லபி என்னும் சிறப்புப் பெயரையும் அவளுக்கு அளித்தான் என்றும் தோன்றுகிறது.

இவ்வாறு பல துறைகளிலும் புகுந்து தமிழ் மக்களின் வாழ்க்கையை இன்புறுத்திய இசைத் தமிழ், இக் காலத்திலே நாட்டுப் பற்றை வளர்ப்பதற்கும், அரசியல் அறிவைப் பரப்புவதற்கும் பயன்படுகின்றது. இந்த வகையில் வழி காட்டியவர் 'பாட்டுக்கொரு புல வன்' என்று பாராட்டப்படுகின்ற பாரதியாரே ஆவார்.

இந் நாட்டில் வழங்கிய பழைய இசைப் பாட்டு வகை பாரதியார் கவிதையிலே மிளிர்கின்றது. இந் நாடு சுதந்தரம் அடைந்த பொழுது மக்கள் எல்லோரும் பாடிய பாட்டு, " ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே, ஆனந்த சுதந்தரம் அடைந்து விட்டோமென்று— ஆடுவோமே " என்பது. இந்தப் பாட்டு பழங்காலப் பள்ளுப் பாட்டைத் தழுவி எழுந்தது என்பது சொல் லாமலே விளங்கும். இன்னும், ' பண்டாரப் பாட்டு ' என்று பாரதியார் பாடியுள்ள " அச்சமில்லை அச்ச மில்லை அச்சமென்பதில்லையே " என்ற வீரப் பாட்டு, ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே திருநாவுக்கரசர் பாடிய " அஞ்சுவது யாதொன்றும் இல்லை ; அஞ்ச வருவதுமில்லை " என்ற வீரப் பாட்டை அடியொற்றிச் செல்வதாகும். இங்ஙனம் பழைய இசை மரபுகளைப் பின்பற்றிப் பாடிய பாரதியார், இனி வருங் காலத்தில் இசைத் தமிழ் வளர்ந்தோங்குதற் குரிய வழிகளையும் காட்டியுள்ளார். தமிழ்நாட்டில் தமிழ்மொழி தழைத்து ஓங்க வேண்டுமாயின் 'மறைவாக நமக்குள்ளே பழங் கதைகள் சொல்வதில் ஓர் மகிமை இல்லை ' என்பது பாரதியார் கருத்து. தமிழ்நாட்டின் பெருமையை புத்தம் புதிய முறையில் பாடிய பாரதியார் பாட்டு இந் நாளில் தமிழ் நாடெங்கும் பரவி இன்பம் பயக் கின்றது.

" கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு
வள்ளுவன் தன்னை உலகினுக்கே— தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு "

என்ற பாரதியார் பாட்டைக் கேட்கும் மக்களின் உள்ளத்தில் தமிழ் ஆர்வம் வளராது ஒழியுமோ? "தேமதுரத் தமிழோசை உலக மெல்லாம் பரவும் வகை செய்தல் வேண்டும்" என்ற பாரதியார் பாட்டுத் தமிழ் மக்களைத் தட்டி எழுப்பும் தகைமை வாய்ந்த தன்றோ? இத் தகைய இசைப்பாட்டு ஆயிரம் ஆயிரமாக எழுந்து தமிழ்நாடு எங்கும் பரவுதல் வேண்டும். சிலப்பதிகாரக் கவிஞர் காட்டிய நெறியைக் கடைப் பிடித்துத் தமிழ்நாட்டின் இயற்கைச் செல்வங்களாகிய ஆறுகள், அருவிகள், மலைகள், கடல்கள் முதலியவற்றின் அருமை பெருமைகளை இசைப்பாட்டின் வாயிலாகப் பொதுமக்களுக்கு வழங்குதல் வேண்டும். சென்னைமா நகரம் இப்பொழுது தமிழ் மக்களின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்து நிற்கின்றது. தமிழ் நாட்டின் தலைநகரமாகிய சென்னையம்பதி 'விரிநகர்' என்று புலவர் பாடும் புகழுடையதாகும். இந் நகரில் அமைந்த கடற்கரைச்சாலை இவ்வுலகிலுள்ள அருமையான காட்சிகளுள் ஒன்றென்று நாடறிந்தவர் கூறுவர். இத்தகைய சீர்மை வாய்ந்த சாலையைக் குறித்து அருமையான இசைப் பாட்டுக்கள் தோன்றுதல் வேண்டும். சென்னை அருகேயுள்ள மகாபலிபுரம் என்னும் மாமல்லபுரத்தில் நெய்தலும் குறிஞ்சியும் கொஞ்சி விளையாடும் காட்சி இந் நாட்டார்க்கு மட்டுமன்றி எந்நாட்டார்க்கும் இன்பமளிக்கின்றது. இன்னும் தமிழ் முனிவர் வாழும் பொதிய மலையும், மந்த மாருதம் மகிழ்ந்துலாவும் திருக்குற்றால மலையும் மாந்தர் கருத்தையும் கண்ணையும் கவரும் அழகு வாய்ந்தனவாகும். இவ் வியற்கைப் பொருள்கள்

எல்லாம் இசைப்பாட்டின் வழியாகத் தமிழ் நாட்டார்க்கு இன்பம் அளித்தல் வேண்டும்.

பழமையான பண்களின் வரலாற்றை ஆராய்வதும் புத்தம் புதிய இசைப்பாடல்களை இயற்றுவதும் இத் தமிழிசைச் சங்கத்தின் அடிப்படையான நோக்கமாகும். இத் தகைய பெரும்பணியை மேற்கொண்ட இச் சங்கம் பல்லாண்டு வாழ்க என மனமார வாழ்த்துகின்றேன். இசை நலம் இல்லாத என்னையும் இவ் வரும்பணியில் இசைவித்த செட்டிநாட்டரசர், ராஜா. சர். முத்தையசெட்டியார் அவர்களுக்கும், தமிழிசைச் சங்கத்தார்க்கும் என் பணிவார்ந்த வணக்கம் உரியதாகும்.

# II இயற்கை இன்பம்

## 6. பொங்கலோ பொங்கல்*

தமிழ் நாட்டிலே பல சாதிகள் உண்டு; பல சமயங்கள் உண்டு. ஆயினும் தமிழர் அனைவருக்கும் பொங்கல் நாள் ஒரு புனித நாள். அந்த நாளில், வீடு தோறும் சுவையின் விளக்கம்; வீதிதோறும் மங்கல முழக்கம்; 'பொங்கல் பொங்கல்' என்பதே எங்கும் பேச்சு.

பொங்கல் விழா நடைபெறும் காலமும் இனிய காலம்; கார் உலாவும் வானமும், நீர் உலாவும் ஏரியும் கருணை காட்டும் காலம்; இயற்கை அன்னை பசுமை யான புடைவை உடுத்து, பன்னிறப் பூக்களைச் சூடி, இனிய காயும் கனியும் கரும்பும் அணிந்து இன்பக் காட்சி தருங் காலம்.

பொங்கலுக்குத் தலைநாள் போகி பண்டிகை. அதைக் கொண்டாடும் கருத்தென்ன? போகி என்ப

---

*சென்னை, 'பாரததேவி'யின் பொங்கல் மலரில் எழுதியது.

வன் இந்திரன். அவன் மேகங்களை இயக்கும் இறைவன். தமிழ் நாட்டார் பழங்காலத்தில் இந்திரனை விளை நிலங்களின் இறைவனாக வைத்து வணங்கினார்கள். சோழவள நாட்டில் இந்திர விழா இருபத்தெட்டு நாள் கோலாகலமாக நடைபெற்றது.

“ பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்க ”

வேண்டும் என்று அவ் வானவனைத் தமிழ்நாட்டார் வழிபட்டார்கள். பண்டைத் தமிழரசர் காலத்தில் சிறப்பாக நடந்த அத் திருநாள், இப்பொழுது குன்றிக் குறுகி ஒரு நாளில் பண்டிகையாக நடைபெறுகின்றது.

போகி பண்டிகையை அடுத்து வருவது பொங்கற் புதுநாள் ; அந் நாளில் ‘ பழையன கழிதலும் புதியன புகுதலும்’ நிகழும் ; வீட்டிலுள்ள பழம்பானைகள் விடைபெறும் ; புதுப்பானைகளில் பொங்கல் நடைபெறும். பால் பொங்கும் பொழுது, “ பொங்கலோ பொங்கல் ” என்னும் மங்கல ஒலி எங்கும் கிளம்பும். அப்போது, பெண்கள் குரவையாடுவர் ; பின்பு “ பூவும் புகையும் பொங்கலும் ” கொண்டு இல்லுறை தெய்வத்தை வணங்குவர். அனைவரும் வயிறார உண்டு மகிழ்வர்.

பொங்கலுக்கு அடுத்த நாள் நிகழ்வது மாட்டுப் பொங்கல். நாட்டுப் புறங்களில் அது மிக்க ஊக்கமாக நடக்கும். முற்காலத்தில் மாடே செல்வமாக மதிக்கப் பட்டது. மாடு என்ற சொல்லுக்கே செல்வம் என்னும் பொருள் உண்டு. மன்பதைக்காக உழைக்கும்

வாயில்லா உயிர்களில், மாட்டுக்கு ஒப்பாகச் சொல்லத் தக்கது மற்றொன்று இல்லை. விளை நிலத்தில் ஏர் இழுப்பது மாடு ; பரம்பு அடிப்பது மாடு ; அறுவடைக் காலத்தில் சூடடிப்பது மாடு ; களத்து நெல்லைக் களஞ்சியத்தில் சேர்ப்பது மாடு. ஆகவே, மாடு இல்லையென்றால் பண்ணையும் இல்லை; பயிர்த் தொழிலும் இல்லை.

இன்னும், பாலும் நெய்யும் தந்து மாந்தர் உடலைப் பாதுகாப்பதும் மாடல்லவா ? பாலில் உயர்ந்தது பசுவின் பால். அமைதியும், அன்பும், பொறுமையும் உடையது பசு. தன் கன்றுக்கு உரிய பாலைக் கவர்ந்துகொள்ளும் கல்நெஞ்சருக்கும் கரவாது பால் கொடுக்கும் கருணை வாய்ந்தது பசு. “ அறந்தரு நெஞ்சோடு அருள் சுரந்து ஊட்டும் ” பசுக்களை ஆதரித்தல் வேண்டும் என்பது தமிழர் கொள்கை. கழனியிற் பணி செய்யும் காளை மாடுகளும், காலையும் மாலையும் இனிய பாலளிக்கும் கறவை மாடுகளும் நோயின்றிச் செழித்து வளர்வதற்காக நிகழ்வது மாட்டுப் பொங்கல்.

அந்த நாளில் கன்று காலிகளுக்குக் கொண்டாட்டம். அவற்றை ஆற்றிலும் குளத்திலும் நீராட்டுவர் ; கொம்பிலே பூவும் தழையும் சூட்டுவர் ; மணிகளைக் கழுத்திலே மாட்டுவர்; நல்ல தீனியை ஊட்டுவர் ; பொங்கல் முடிந்தவுடன் அந்தி மாலையில் வீதியிலே விரட்டுவர். அவை குதித்துப் பாய்ந்து கும்மாளம் போடுவது கண்ணுக்கு இனிய காட்சியாகும்.

சென்ற சில ஆண்டுகளில் தமிழ் நாட்டில் பொங்கல் மங்கலாக நடைபெற்றது. இன்றும் அந்த நிலை மாறி விடவில்லை. அரிசிப் பஞ்சமும், ஆடைப் பஞ்சமும், அகவிலைக் கொடுமையும் நாட்டை அரித்துக் கொண்டிருக்கும்பொழுது, பொங்கல் எப்படி இன்பப் பொங்கலாகும் ?

" இனி வரும் பொங்கல் பெரும் பொங்கலாக வேண்டும் ; தமிழ்நாட்டில் உள்ள வெற்றிடம் எல்லாம் விளைநிலமாக மாறவேண்டும் ; உண்ண உணவும் உடுக்க உடையும் எல்லார்க்கும் கிடைக்கவேண்டும் ; சென்னைமாநகரில் 'கன்றுவி' யாகவுள்ள தோற் கன்றுகள் ஒழிந்து பாற் கன்றுகள் பெருகவேண்டும்; தமிழ்நாடு தன்னரசு பெறுதல் வேண்டும் ; தமிழ்த் தாய் அரியாசனத்தில் அமர்ந்திருத்தல் வேண்டும் " என்று எல்லாம் வல்ல ஆண்டவனை இந் நன்னாளில் வேண்டுவோமாக !

# 7. சித்திரை பிறந்தது*

தமிழ்நாட்டில் கூனியாகிய பங்குனி மாதம் கழிந்தால் எங்கும் மங்கல ஒலி. "கூனி குடி போகாதே; ஆனி அடிகோலாதே" என்பது பழமொழி. இப்படிக் கூனியும் ஆனியும் கூடாவென்று கருதும் தமிழர், சித்திரையைச் சிறந்த ஆர்வத்தோடு வரவேற்கின்றார்கள்; தமிழ் ஆண்டுப் பிறப்பை அதன் தலை நாளில் அமைத்துக் கொண்டாடுகின்றார்கள்; அந் நாளைப் புனித நாளாகப் போற்றுகின்றார்கள். அதன் காரணம் என்ன?

சித்திரை மாதத்தில் இளவேனிற் காலம் தொடங்குகின்றது. வசந்தம் என்னும் இளவேனில் இன்ப சுகம் தரும் காலம். அப்போது, பசுமையான செழுஞ்சோலை பார்க்குமிடமெங்கும் கண்ணுக்கு விருந்தளிக்கும். மாஞ்சோலை மெல்லிய தளிராடை புனைந்து இலங்கும்; வேம்பின் கொம்பிலே பூத்த சிறு வெண்மலர்கள் புதுமணம் கமழும்; தென்னை மரங்கள் இனிமையான இளநீரைத் தரும்; பனை மரங்கள் சுவையான பதநீரைக் கொடுக்கும்.

வசந்தகாலம் பிறந்ததென்று மகிழ்ந்து, பசுங்கிளிகள் மழலை மொழி பேசி, மரக்கிளைகளிலே கொஞ்சிக் குலாவும்; கருங் குயில்கள் மறைந்து நின்று கூவும். "மன்னன் மாரன் மகிழ் துணையாகிய இன் இளவேனில் வந்தனன்" என்று குயில் கூவுவதாக இளங்கோவடிகள் பாடுகின்றார். எனவே, இளவேனிற் காலம் மன்மதன் மகிழ்ந்து ஆட்சி செய்யும் காலம்.

* 'பாரத தேவி'யின் சித்திரை மலரில் எழுதியது.

புதுமணம் புரிய விரும்புவோர் சித்திரையின் வரவை மெத்த ஆசையுடன் நோக்குவர். திருமணத் திற்குரிய சூழ்நிலை அப்போது இயல்பாக அமைந் திருக்கும் ; பகலவன் ஒளி தருவான். வீடுதோறும் நெல்லும் பிறவும் நிறைந்திருக்கும். தென்றல் என்னும் இளங்காற்று வீசிக்கொண்டிருக்கும். இனிய திருமணம் இன்பமாக நடைபெறும்.

இத் தகைய இன்பம் நிறைந்த இளவேனிலின் சுகத்தை ஈசனுடைய பேரின்பத்திற்கு நிகராகப் பாடு கின்றார் வடலூரடிகளார். இளங்கோடையிலே, இளைப் பாற்றிக் கொள்ளுதற் கேற்ற செழுஞ் சோலையாகவும், ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தெண்ணீராகவும், மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றாகவும் ஈசனது இனிய கருணையைக் கண்டு போற்றுகின்றார் அக் கவிஞர்.

எனவே, இயற்கை அன்னை இனிய கோலத்தில் இலங்கும் காலம் இளவேனிற் காலம். மாந்தர் ஐம் பொறிகளாலும் நுகர்தற்குரிய இன்பம் பொங்குங் காலம் இளவேனிற் காலம். பனியால் நலிந்த மக்கள் பகலவன் ஒளியைக் கண்டு, “ஞாயிறு போற்றுதும், ஞாயிறு போற்றுதும்” என்று இன்புற்று ஏத்தும் காலம் இளவேனிற் காலம். ஆகவே, இயற்கையோடு இசைந்து வாழ்ந்த பழந்தமிழ் மாந்தர், இன்பநெறி காட்டும் இளவேனிற் பருவத்தின் முதல் நாளைத் தமிழ் ஆண்டின் தலைநாளாகக் கொண்டது மிகப் பொருத்த முடையதன்றோ ?

# 8. தமிழ்த் தென்றல் *

தென்னாட்டிலே தென்றல் என்றொரு பொருள் உண்டு; தனியே அதற்கொரு சுகம் உண்டு. வசந்த காலத்தில் தெற்கே யிருந்து அசைந்து வரும் தென்றலின் சுகத்தை நன்றாக அறிந்தவர் தமிழர்; வடக்கே யிருந்து வரும் குளிர்காற்றை வாடை என்றார்கள். தெற்கே யிருந்து வரும் இளங்காற்றைத் தென்றல் என்றார்கள். வாடை என்ற சொல்லிலே வன்மை யுண்டு; தென்றல் என்ற சொல்லிலே மென்மை யுண்டு; தமிழகத்தார் வாடையை வெறுப்பர்; தென்றலில் மகிழ்ந்து திளைப்பர்.

இயற்கை யன்னை இனிய கோலங்கொண்டு விளங்கும் இளவேனிற் காலத்தில், மெல்லிய தென்றலைத் தேராகவும், இனிய கரும்பை வில்லாகவும் குயிலைத் தூதாகவும் கொண்டு மன்மதன் ஆட்சி புரிகின்றான் என்று கவிஞர் பாடி மகிழ்வர்.

இத் தகைய தென்றல், பிறப்பு வகையிலும் சிறப்பு வாய்ந்தது. நறுமணங் கமழும் சந்தனச் சோலை சூழ்ந்த செந்தமிழ் மலையே அதன் பிறப்பிடம் என்பர்.

" திங்கள்முடி சூடுமலை, தென்றல்விளை யாடுமலை
தங்குமுகில் சூழுமலை, தமிழ்முனிவன் வாழுமலை "

* விருதுநகரிலே தோன்றியுள்ள 'தமிழ்த்தென்றல்' என்ற பத்திரிகையின் தலையங்கமாக எழுதப்பட்டது.

என்று அம் மலையைப் புகழ்ந்து பாடினாள் ஒரு குறவஞ்சி. மெல்லிய முகிலைத் துகிலாக உடுத்து, வெள்ளிய மதியை முடியிலே அணிந்து விளங்கும் பொதிகைத் தாயின் மடியிலே தவழ்ந்து விளையாடும் இளங் குழந்தையாக அவ் வஞ்சிக்குத் தென்றல் காட்சி யளிக்கின்றது.

'திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலி'க்குத் திருஞான சம்பந்தர் எழுந்தருளிய பொழுது, பொதிகைத் தென்றல் அவரை வரவேற்று இன்ப சுகம் தந்தது. தண்ணறுஞ் சோலைகளிலும், தாழம் பூக்களிலும் நுழைந்து, நறுமணம் கவர்ந்து வந்த பொதிகைத் தென்றலைத் தேவாரப் பாட்டில் இசைத்துப் பாராட்டினார் அவ் விளங் கவிஞர்.

"துன்றுதண் பொழில்நுழைந்து எழுவிய கேதகைப்
போதளைந்து
தென்றல்வந் துலவிய திருநெல்வே லிஉறை
செல்வர் தாமே"

என்பது அவர் திருப்பாட்டு. பொதிகையிலே தவழ்ந்த குழவித் தென்றல் நெல்லையம் பதியிலே நடந்து உலாவக் கண்டு இன்புற்றார் அக் கவிஞர்.

மதுரை மாநகரின் அருகே கண்ணகியும் கோவலனும் நடந்து சென்றபொழுது தென்றல் அவரை எதிர்கொண்டு அழைத்தது. அதன் பிறப்பையும் வளர்ப்பையும் எடுத்து உரைக்கின்றார் இளங்கோவடிகள் :

"மலயத்து ஓங்கி மதுரையில் வளர்ந்து
புலவர் நாவிற் பொருந்திய தென்றல்"

என்பது அவர் புகழுரை. முத்தமிழ் முனிவன் வாழும் மலையிலே பிறந்து, சங்கத் தமிழ் வழங்கும் மதுரையிலே வளர்ந்த தென்றலைத் தமிழ்த் தென்றலாகவே கருதி இன்புறுகின்றார் கவிஞர்; புலவர் பாடும் புகழுடைய தென்றலைப் போற்றி மகிழ்கின்றார்.

மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாத பேரின்ப சுகத்தை ஒல்லும் வகையால் உணர்த்தலுற்றார் அருட் கவிஞர் ஒருவர்: இளவேனிற் காலம்! சித்திரை மாதம்! முழுமதி எங்கும் ஒளி வீசுகின்றது! தண்ணீர் நிறைந்த ஒரு தாமரைக் குளத்திலே அவ்வொளி தவழ்கின்றது. இவ் வியற்கைக் காட்சியைக் கண்டு இன்புற்றிருக்கின்றான் ஒருவன். அப்போது தென்றல் அசைந்து வருகின்றது. அம் மெல்லிய காற்றிலே நல்ல வீணையின் ஒலி மிதந்து வந்து செவிக்கு விருந்தளிக்கின்றது. இதனைக் கவிதையிலே காட்டுகின்றார் கவிஞர்:

'' மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே ''

என்பது திருநாவுக்கரசர் இசைத்த பாட்டு. ஈசன் அளிக்கும் இன்ப சுகம், வசந்த காலத்தில் இசைந்த இயற்கை இன்பம் போன்றது என்று அருளினார் அவ் வருட் கவிஞர்.

புகழ் பூத்த பொதிய மலையிற் பிறக்கும் தென்றலைப் போன்று, பொருள் பூத்த விருதுநகரிலே பிறக்கின்றது 'தமிழ்த் தென்றல்.' இலக்கிய மறுமலர்ச்சிச்

சோலையில் புகுந்து தமிழ் மணத்தை யெல்லாம் தமிழ்த் தென்றல் வாரி வழங்கும் என்று தமிழகம் எதிர்பார்க்கின்றது. தென்றல் வீசும் காலத்தில். 'பிரிந்தவர் பொருந்துவர் ; பிணக்கமுற்றவர் இணக்கமுறுவர் ; ஊடி நின்றவர் கூடி மகிழ்வர்' என்பது தமிழர் கொள்கை.

> "ஊடினீர் எல்லாம் உருவிலான் தன்ஆணை
> கூடுமின் என்று குயில் சாற்றும்"

என்பதாகச் சிலப்பதிகாரம் கூறுகின்றது. எனவே, தமிழ்த் தென்றல், தமிழர் இனத்திலே, பிரிந்தவரைப் பொருத்தும் ; வேறுபட்டவரை ஒன்றுபடுத்தும் ; தமிழ்க் குலத்தை அரிக்கின்ற வேற்றுமைகளை ஒழிக்கும் ; தமிழருக்கு இன்ப நெறி காட்டும் என்று நம்புகின்றோம்.

## 9. திருக்குற்றாலம்

தென்றல் அசைந்து வரும் தென் தமிழ்நாட்டில் அமைந்த திருக்குற்றாலம், மலைவளம் படைத்த பழம் பதியாகும். அம்மலையிலே, கோங்கும் வேங்கையும் ஓங்கி வளரும்; குரவமும் முல்லையும் நறுமணங் கமழும்; கோலமா மயில் தோகை விரித்தாடும்; தேனுண்ட வண்டுகள் தமிழ்ப்பாட் டிசைக்கும். இத் தகைய மலையினின்று விரைந்து வழிந்து இறங்கும் வெள்ளருவி வட்டச் சுனையிலே வீழ்ந்து பொங்கும் பொழுது சிதறும் சிறு நீர்த் திவலைகள் பாலாவிபோற் பரந்து எழுந்து மஞ்சினோடு சேர்ந்து கொஞ்சிக் குலா வும். அவ் வருவியில் நீராடி இன்புற்ற மேலைநாட்டுப் பெரியார் ஒருவர், 'இந் நானிலத்தில் உள்ள நன்னீர் அருவிகளுள் தலைசிறந்தது குற்றால அருவியே என்று கூறுதல் மிகையாகாது!' என்று புகழ்ந் துரைத்தார்.*

வேனிற் காலத்தில் திருக்குற்றால மலையில் வீசும் மெல்லிய பூங்காற்று மருந்துச் செடிகொடிகளின் நலங்களைக் கவர்ந்து வருதலால் நலிந்த உடலைத் தேற்றும் நன் மருந்தாகும்; சலித்த உள்ளத்தைத் திருத்தும் சஞ்சீவியாகும். பயன் மரம் நிறைந்த திருக்குற்றாலச் சாரலில் வேரிலே பழம் பழுத்து, தூரிலே சுளை வெடிக்கும் குறும் பலா மரம் ஒன்று தொன்றுதொட்டு விளங்குகின்றது. அப் பழுமரம் திருஞான சம்பந்தர் தேவாரத்தில் அமையும் பேறு

*History of Tinnevelly by Bishop Caldwell.

பெற்றது. குறும் பலாவின்கீழ் அமர்ந்த சிவக் கொழுந்தை அப்பெருமான் மனங்குளிர்ந்து பாடினார். திருக்குற்றால மலையிலே வாழும் களிறும் பிடியும் விரையுறு நறுமலர் கொய்து குறும்பலாவிற் கோயில் கொண்ட ஈசனைக் குழைந்து வணங்கும் கோலம்.

"பூந்தண் நறுவேங்கைக் கொத்திறுத்து
மத்தகத்திற் பொலிய ஏந்திக்
கூந்தற் பிடியும் களிறும் உடன்வணங்கும்
குறும் பலாவே"

என்ற தேவாரப் பாட்டில் எழுதிக் காட்டப்படுகின்றது.

நறுமணங் கமழும் பொழில்களைக் காணும்பொழுதும், அப் பொழில்களின் இடையே கிளைக்குக் கிளை தாவி விளையாடும் குரங்குகளைப் பார்க்கும்பொழுதும் பிள்ளைப் பெருமானாகிய திருஞான சம்பந்தர் உள்ளம் துள்ளி மகிழும். 'தேனருவித் திரை யெழும்பி வானின் வழி யொழுகும்' திருக்குற்றால மலையில், இந் நாள் இளைஞர்கள் கண்டு இன்புறுகின்ற வானரங்களை அந் நாளில் திருஞான சம்பந்தரும் கண்டார் போலும்! அப்பொழுது அவர் அடைந்த உள்ளக் கிளர்ச்சி ஒரு தெள்ளிய பாட்டாயிற்று.

"மலையார் சாரல் மகவுடன் வந்த மடமந்தி
குலையார் வாழைத் தீங்கனி மாந்தும் குற்றாலம்"

என்ற தேவாரப் பாட்டில் மந்திகள் தம் வயிற்றைக் கட்டித் தழுவிய குட்டிகளோடு வாழைக் குலைகளின் மீது அமர்ந்து வளமான கனிகளை மாந்தும் காட்சி அழகுற மிளிர்கின்றது.

திருக்குற்றாலத்தின் அருகே சிறந்த ஊர்கள் சில உண்டு. வடநாட்டுக் காசிக்கு நிகரான தென்காசி யென்னும் ஊர் அதற்கு மூன்று மைல் தூரத்தில் உள்ளது. பதினைந்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் தென்பாண்டி நாட்டில் ஆட்சி புரிந்த பராக்கிரம பாண்டியனால் தென்காசிக் கோவில் கட்டப் பட்டதென்று சாசனம் தெரிவிக்கின்றது. அரசாளும் உரிமையும் அருந்தமிழ்ப் புலமையும் ஒருங்கே வாய்ந்த அதிவீரராம பாண்டியர் தென்காசியில் இருந்து நைடதம் முதலிய நயஞ்சான்ற தமிழ் நூல்களை இயற்றினார் என்பர்.

இன்னும் திருக்குற்றாலத்திற்கு அண்மையிலுள்ள சிற்றூர்களில் ஒன்று மேலகரம் எனப்படும். அவ்வூரில் சைவ வேளாள மரபிலே பிறந்து தெள்ளிய கவிதை பாடும் திறமை பெற்றார் திரிகூட ராசப்பர். இவர் இயற்றிய 'குற்றாலக் குறவஞ்சி' நாடகத்தை நற்றமிழுலகம் புகழ்ந்து பாராட்டுகின்றது.

மலைச்சாரலிலே, தேனும் தினைமாவும் உண்டு திளைக்கும் கானவர் வாழ்க்கையும், காதலுற்ற கடுவன் மந்திக்குக் கனி கொடுத்துக் கொஞ்சும் காட்சியும், அருள் வடிவாய அருவி, அகத்தும் புறத்தும் செறிந்த அழுக்கைப் போக்கிக் கழுநீராய் ஓடும் அழகும், பண் பாகக் குறி சொல்லிப் பட்டும் பணியும் பரிசு பெறும் குறவஞ்சியின் கோலமும் அந் நூலில் இனிமையாக எழுதிக் காட்டப்பட்டுள்ளன.

திரிகூடராசப்பர் இயற்றிய குறவஞ்சி நாடகம் மதுரை மாநகரில் அரசு வீற்றிருந்த முத்து விசயரங்க

சொக்கநாத நாயக்கர் கருத்தைக் கவர்ந்தது. அதன் அருமை பெருமைகளைக் கற்றறிந்தார் வாயிலாகக் கேட்டு இன்புற்ற நாயக்கர் திரிகூடராசப்பரை ஆதரிக்க விரும்பினர்; குற்றாலத்தில் இன்றும் ‘குறவஞ்சிமேடு’ என்று வழங்குகின்ற நன்செய் நிலத்தை அவருக்கு நன்கொடையாக அளித்தார். கருப்புக்கட்டி ஊற்றின் அருகே அமைந்துள்ள அவ் வளமார்ந்த நிலம், வழிவழியாக அக் கவிராயர் குடும்பத்தினர் ஆளுகையில் இருந்து வருகின்றது. கவிப்புலமையால் திரிகூடராசப்பர் பெற்ற கவிராசர் என்ற பட்டமும் திருக்குற்றால நாதர் சந்நிதியில் வாகனக் கவி பாடும் சிறப்பும் இன்றும் அவர் குடும்பத்தார்க்கு உண்டு.

திருக்குற்றாலத்தின் அருகே அமைந்த ஊர்கள் யாவும் குறிஞ்சி வளம் வாய்ந்தனவாகும். அவற்றுள் ஒன்று பைம்பொழில் என்னும் அழகிய பெயர் பெற்றுள்ளது. பசுமையான சோலை சூழ்ந்த சிற்றூரைப் பைம்பொழில் என்றழைத்த பண்டைத் தமிழ் மக்களது மனப்பான்மை எண்ணுந்தொறும் இன்பம் பயப்பதாகும். கவிநலஞ் சான்ற அவ்வூர்ப் பெயரைச் சரியாகச் சொல்ல மாட்டாத பாமர மக்கள் ‘பம்புளி’ என்று சிதைத்துவிட்டார்கள். அச் சிற்றூரின் எல்லையில் திருமலை யென்னும் சிறந்த குன்றம் அமைந்திருக்கின்றது. முருகப் பெருமான் எழுந்தருளிய குன்றமாதலால் அது, திருமலை என்னும் பெயர் பெற்றது.

இன்னும், குற்றாலத்தின் ஒருசார் காசிமேசபுரமும், இலஞ்சியும் அமைந்துள்ளன. காசிமேசபுரத்

திற்கும் காசிக்கும் எவ்வகைத் தொடர்பும் இல்லை. ஆங்கில வர்த்தகக் கம்பெனியார் காலத்தில் காசா மேஜர் என்ற பெயருடைய ஆங்கிலேயர் ஒருவர் தென்னாட்டில் வர்த்தகக் கர்த்தராக நியமிக்கப்பட்டார். அவர் குற்றால மலையின் செழுமையைக் கண்டு அங்குத் தோட்டப்பயிர் செய்யத் தொடங்கினார். அவர் பெயரால் அமைந்த சிற்றூர் காசாமேசர்புரம் என்று பெயர் பெற்று இப்பொழுது காசிமேசபுரம் என்று வழங்குகின்றது. 'பொன் இலஞ்சி' யென்றும் 'மீறும் இலஞ்சி' யென்றும் குறவஞ்சிக் கவிராயரால் சிறப்பிக்கப்பட்ட சிற்றூர் செல்வம் மலிந்த சீரூராய்த் தென் காசியின் அருகே திகழ்கின்றது.

# 10. பழகு தமிழ்

தமிழகத்திலே பல நாடுகள் உண்டு ; பல குலங்கள் உண்டு. ஒரு நாட்டுத் தமிழுக்கும் இன்னொரு நாட்டுத் தமிழுக்கும் வேற்றுமையே இல்லை என்று கூறமுடியாது. ஒரு குலத்தார் பேசுந்தமிழ் மற்றொரு குலத்தார் பேசுந்தமிழை எல்லா வகையிலும் ஒத்திருக்கும் என்று சொல்ல முடியாது.

பந்தல் என்ற சொல்லின் ஆட்சியைப் பார்ப்போம் : திருமணத்திற்குப் பந்தல் போடும் வழக்கம் இந் நாட்டில் சாலப் பழமை வாய்ந்தது. காவிரிப்பூம் பட்டினத்திலே செல்வக் குடியிற் பிறந்த கண்ணகிக்கும் கோவலனுக்கும் முத்துப்பந்தலிலே திருமணம் நிகழ்ந்தது. "மாலை தாழ் சென்னி வயிரமணித் தூணத்து நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்" என்று அப்பந்தலைச் சிலப்பு பாடிற்று. கோடையிலே வழிநடந்து செல்வார்க்கு நீரும் நிழலும் தரும் பந்தலைத் தண்ணீர்ப் பந்தல் என்பர்.

இத் தகைய மேன்மையான சொல் தனவணிகர் நாடு என்னும் செட்டிநாட்டிலே அமங்கலச் சொல்லாகக் கருதப்படுகின்றது. பந்தல் என்பது அந் நாட்டிலே மணப் பந்தலைக் குறிப்பதில்லை ; பிணப் பந்தலையே குறிக்கும். இழவு வீட்டில் போடுவது பந்தல்; கல்யாண வீட்டில் போடுவது காவ்ணம் அல்லது கொட்டகை. இலக்கியத்தில் வழங்கும் காவணம் என்ற

அருஞ்சொல், செட்டி நாட்டிலே பழகு தமிழாய்ப் பயில்கின்றது.

இனி, தொண்டு என்ற தொன்மையான சொல்லைப் பார்ப்போம்: தொண்டு என்பது சேவை. நாட்டுக்குச் செய்யும் சேவை தேசத் தொண்டு எனப்படும். இறைவனுக்குச் செய்யும் சேவை திருத் தொண்டு எனப்படும். 'தொண்டர்தம் பெருமை சொல்லவும் அரிதே' என்னும் வாய்மொழி, பண்டைக் காலத்தே தமிழ் நாட்டில் எழுந்தது. இத்தகைய சொல், கொங்கு நாட்டிலே இப்பொழுது இழிந்த பொருளில் வழங்குகின்றது. ஒழுக்கம் கெட்டவரைக் குறிக்கின்றது அச்சொல்.

'பையச் சென்றால் வையந் தாங்கும்' என்பதுஇந் நாட்டிலே ஒரு பழமொழி. பைய என்றால் மெல்ல என்பது பொருள். 'பையப் போ' என்ற சொல் பாண்டி நாட்டிலே பெருவழக்குடையது. தேவாரத்தில் இச் சொல் ஆளப்பட்டுள்ளது. மதுரை மாநகரில் சிவனடியார் திரு மடத்தில் தீயோர் வைத்த தீயை அரசனிடம் செலுத்தத் திருவுளங்கொண்ட திருஞான சம்பந்தர், " பையவே சென்று பாண்டியற்கு ஆகவே " எனப் பணித்ததாகத் தேவாரம் கூறும். இத் தகைய சிறந்த ஆட்சியுடைய சொல் இப்போது சென்னை முதலிய இடங்களில் வழங்குவதில்லை.

அங்காடி என்பது முன்னொரு காலத்தில் தமிழ் நாடெங்கும் வழங்கிய சொல்.* இக் காலத்தில் 'பசார்' என்று சொல்லப்படும் இடமே முற்காலத்தில் அங்காடி

* தஞ்சை மாவட்டத்தில் அங்காடிக்காரீ என்ற சொல் வழக்கில் உள்ளது. தெருவிலே கூவி விற்றுச் செல்வோரை அது குறிக்கிறது.

எனப்பட்டது. பெரிய நகரங்களில் அந்தியும் பகலும் அங்காடி நடைபெற்றது. அந்தியில் நடைபெற்ற அங்காடியை அல்லங்காடி என்றும், பகலில் நடை பெற்ற அங்காடியை நாளங்காடி என்றும் அழைத்தனர். பட்டினத்தடிகள் அங்காடி என்ற சொல்லை எடுத்தாள்கின்றார். "அங்காடி நாய்போல் அலைந்து திரிந்தேனே" என்பது அவர் பாட்டு. கன்னடத்திலும் தெலுங்கிலும் இன்றும் அங்கடி என்ற சொல் வழங்குகின்றது. மலையாளத்திலும் அங்ஙடி உண்டு. தமிழ் மொழியில் அங்காடியை மீண்டும் ஆட்சியில் அமைத்தால் எத்துணை அழகாக இருக்கும்? செந்தமிழில் ஆர்வமுடைய செட்டியார் ஒருவர் தமது காசுக்கடைக்கு 'அணிகல அங்காடி' என்று பெயரிட்டுள்ளார். சென்னையிலுள்ள மூர் மார்க்கட்டை, மூரங்காடி என்று வழங்கும் நாள் எந் நாளோ ?

பைத்தியக்காரனுக்குத் தமிழ் நாட்டிலே பல பெயர்கள் உண்டு. படித்தவர்கள் அவனைப் பித்தன் என்பார்கள்; பித்துக்கொண்டவன் என்னும் பொருள் நன்றாகத் தோன்றும்படி பித்துக்கொள்ளி என்றும் சொல்லுவார்கள். கிறுக்கன் என்பதும் அவனையே குறிக்கும். திருநெல்வேலியிலே பைத்தியக்காரனைக் கோட்டிக்காரன் என்பர். கோட்டி என்பது நல்ல தமிழ்ச் சொல். கோட்டம் என்றால் வளைவு அல்லது கோணல். மனத்திலே உள்ள கோணல் மனக்கோட்டம் எனப்படும். பேச்சிலே வளைவு நெளிவு காணப் பட்டால் அதைச் சொற்கோட்டம் என்பர். இவ் விரு வகைக் கோட்டத்தையும் திருவள்ளுவர் எடுத்துக்

காட்டியுள்ளார். 'சொற்கோட்டமில்லது செப்பம்; ஒரு தலையா உட் கோட்ட மின்மை பெறின்' என்பது திருக்குறள். எனவே அறிவிலே கோட்டம் உடைய வனைக் கோட்டி என்று சொல்வது பாண்டி நாட்டு வழக்கு.

கோட்டியைத் தீர்க்கும் குற்றால அருவியைச் சிறிது பார்ப்போம். மலையினின்று விழும் அருவியைக் காண்பது கண்ணுக்கு இன்பம். அருவியில் நீராடுவது உடலுக்கு இன்பம். திருநெல்வேலியில் உள்ள திருக்குற்றாலத்திலே அருமையான பல அருவிகள் உள்ளன. தேனருவி என்பது ஓர் அருவியின் பெயர். வட அருவி என்பது மற்றோர் அருவி; ஐந்தலை அருவி என்பது இன்னோர் அருவி. அருவியை நினைக்கும் பொழுதே கவிகள் உள்ளத்தில் ஆனந்தம் பிறக்கும்; கவிதை பொங்கும். 'வீங்கு நீர் அருவி வேங்கடம்' என்று திருப்பதியைச் சிறப்பித்துப் பாடினார் சிலப்பதிகார ஆசிரியர். 'பொங்கருவி தூங்கும் மலை பொதிய மலை என்மலையே' என்று செம்மாந்து பாடினாள் பொதியமலைக் குறத்தி. 'தேனருவித் திரை எழும்பி வானின் வழி ஒழுகும்' என்று பாடினாள் திருக்குற்றாலக் குறவஞ்சி. இத் தகைய பழமையான சொல் இன்றும் திருநெல்வேலியில் வழங்குகின்றது. ஆனால் சென்னை முதலிய இடங்களில் அருவி என்றால் தெரியாது; நீர் வீழ்ச்சி என்றால்தான் தெரியும். நீர் வீழ்ச்சி என்பது Water-Fall என்ற ஆங்கிலப் பதத்தின் நேரான மொழிபெயர்ப்புப்போல் காணப்படுகின்றது.

மலையிலே வாழ்கின்ற ஒரு குலத்தாரை—மலைப் பளிங்கர் என்பர். வேடர் வகுப்பைச் சேர்ந்தவர்

அவர் ; மலை நாட்டுப் பழங்குடிகள். பளிங்கன் என்ற சொல்லை ஆராய்ந்தால் அஃது ஒருபழமையான தமிழ்ச் சொல்லின் சிதைவு என்பது புலனாகும். தமிழ் இலக்கியத்தில் மலையில் வாழும் வகுப்பார்க்குப் பல பெயர்கள் உண்டு. அவற்றுள் ஒன்று புளினர் என்பது. புளினர் என்ற சொல்லைக் கம்பர் எடுத்தாள்கின்றார். மறைந்து நின்று அம்பெய்த இராமனை நோக்கி,

*'வெவ்விய புளினர் என்ன விலங்கியே மறைந்து வில்லால் எவ்விய தென்னை'*

என்று வாலி கேட்டான் என்பது கம்பர் பாட்டு. புளினன் என்ற சொல்லே பளிங்கன் என்று மருவி வழங்குகின்றது.

தமிழ் நாட்டுப் பழங்குடிகளில் மற்றொரு வகுப்பார் பரதவர். கடற்கரை யூர்களில் வாழ்பவர் பரதவர் என்று தமிழ் இலக்கியம் கூறும். பழங்காலத்தில் சிறந்திருந்த காவிரிப்பூம்பட்டினம், கொற்கை முதலிய துறைமுக நகரங்களில் பரதவர் செழித்து வாழ்ந்தார்கள். காவிரிப்பூம்பட்டினம் பரதர் மலிந்த பயன் கெழு மாநகராக விளங்கிற்று. கொற்கைக் கடலில் மூழ்கி முத்தெடுத்து, 'தென்னாடு முத்துடைத்து' என்று எந் நாட்டவர்க்கும் காட்டியவர் பரதவரே. பரதவர் என்பது பரதர் என்று குறுகி, பரவர் என்று மருவி வழங்குகின்றது. தூத்துக்குடியிலே பரவர் குலத்தார் இன்றும் செழுமையுற்று வாழ்கின்றார்கள்.

# III காவிய இன்பம்

## 11. காதலும் கற்பும்*

காதல் என்பது காதுக்கினிய சொல்; கருத்துக் கினிய பொருள். காதல் உண்டாயின் இவ் வுலகில் எல்லாம்உண்டு; காதல் இல்லையேல் ஒன்றும் இல்லை. "காதல், காதல், காதல்—இன்றேல் சாதல், சாதல், சாதல்" என்று பாடினார் பாரதியார். ஆயினும், அச் சொல்லை எல்லோரும் கூசாமல்பேசுவதில்லை. சின்னஞ் சிறியவர் காதில் அது விழலாகாதாம். கன்னியர் வாயில் அது வரலாகாதாம். இப்படி ஏன் அச் சொல் ஒதுக்கப் படுகின்றது? தமிழ்க் கவிகள் காதல் என்ற சொல்லை எடுத்தாளவில்லையா? நீதி நூல்களில் அச் சொல் வரவில்லையா? திருப்பாடல்களில் அஃது இடம் பெற வில்லையா? காவியங்களிலும், நீதி நூல்களிலும், திருப்பாசுரங்களிலும் பயின்ற அழகிய தமிழ்ச் சொல்லை

* சென்னை வானொலி நிலையத்திலே பேசியது; நிலையத்தார் இசைவுபெற்றுச் சேர்க்கப்பட்டது.

ஏன் கூசிக் கூசிப் பேசவேண்டும்? தேவாரத்திலே அடியாரது காதல் பேசப்படுகின்றது.

> "காதலாலே கருதும் தொண்டர்
> காரணத்தர் ஆகி"

நின்ற சிவபெருமானைச் சுந்தரர் பாடுகின்றார். இன்னொரு பெரியார்—திருஞான சம்பந்தர்—இறைவன் திருநாமத்தை ஓதும் காதலடியார் பெருமையைக் கூறுகின்றார்.

> "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
> ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது
> வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது
> நாதன் நாமம் நமச்சி வாயவே"

என்பது அவர் திருப்பாட்டு. இவ்வாறு தேவாரம் முதலிய தெய்வப் பாடல்களிற் பயின்ற காதல் என்ற சொல்லைக் கடிசொல்லாகக் கருதலாமோ?

காதல் என்ற சொல்லின் பொருள்தான் என்ன? அன்பு என்றாலும் காதல் என்றாலும் பொருள் ஒன்றே. பெற்றோர்க்குப் பிள்ளையிடம் உள்ள அன்பு காதல் தான். 'கடந்த பேர்களும் கடப்பரோ மக்கள்மேல் காதல்' என்று கவிஞர் பாடவில்லையா? பெற்ற பிள்ளையைக் காதலன் என்று கூறுவதுண்டு. வாலியின் மைந்தனாகிய அங்கதனை 'வாலி காதலன்' என்று குறிக்கின்றார் கம்பர். இவ்வாறே நண்பனையும் காதலன் என்று கவியரசர் கூறுவர். கங்கைக் கரையிலே இராமனுடைய நண்பனாயினான் குகன். அவன் அன்பிற்குக் கங்கு கரையில்லை. அது கண்ட இராமன்

"சீதையை நோக்கித் தம்பி திருமுகம் நோக்கித் தீராக்
காதல னாகும் என்று கருணையின் மலர்ந்த கண்ணன்
யாதினும் இனிய நண்ப இருத்தி ஈண்டு எம்மொடு என்றான்."

எனவே, பக்தியும் காதல்; பிள்ளைப் பாசமும் காதல்; நேசமும் காதல்; சுருங்கச் சொல்லின் தலை சிறந்த அன்பே காதல்.

இவ்வளவு விரிந்த பொருளில் வழங்கிய காதல் என்ற சொல், இப்பொழுது ஆண் பெண் என்னும் இரு பாலாரிடையே உள்ள அன்பையே பெரும் பாலும் குறிக்கின்றது. காதலன் என்றால் கணவன்; காதலி என்றால் மனைவி. இவ் விருவரையும் இல் வாழ்க்கையில் இழுப்பது காதல். பின்பு இல்வாழ்க் கையை நல்வாழ்க்கையாக நடைபெறச் செய்வதும் காதல். கண்ணிரண்டும் ஒன்றையே காண்பது போல இல்வாழ்க்கையில் ஈடுபட்ட இருவரையும் ஒருநெறிப் படுத்துவது காதல். "காதல் மனையாளும் காதலனும் மாறின்றித் தீதில் ஒரு கருமம் செய்பவே" என்றார் ஒரு கவிஞர்.

ஆதியில், காதல் மணமே தமிழ் நாட்டில் சிறந்து விளங்கிற்று. 'காதல் இல்லாத வாழ்க்கை உயிரில் லாத உடல் போன்றது' என்பது தமிழர் கொள்கை. காதலுற்ற கன்னியர், தம் கருத்து நிறைவேறும் வண்ணம் காமனை வேண்டிக்கொள்ளும் வழக்கமும் முற்காலத்தில் இருந்ததாகத் தெரிகின்றது. காதல் விளைக்கும் தேவனைக் 'காமன்' என்றும், 'காமவேள்' என்றும் தமிழர் அழைத்தனர். தாம் கருதிய காதலனைக் கணவனாகப் பெறுவதற்கும், பிரிந்த கணவனை மீண்

டும் அடைவதற்கும், காமன் கோயிலிற் சென்று மங்கையர் வழிபடும் வழக்கம் அந் நாளில் இருந்தது. கோவலன் மாதவி என்னும் நடிகையின் மையலிலே மூழ்கித் தன் மனைவியாகிய கண்ணகியைப் பிரிந்திருந்தபோது, 'காமவேள் கோயிலிற் சென்று தொழுதால் கணவன் மீண்டும் வந்து சேர்வான்' என்று அக் கற்பரசியிடம் அவள் உயிர்த்தோழி எடுத்துரைத்தாள்.

> "கடலொடு காவிரி சென்றலைக்கும் முன்றில்
> காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு
> தாமின்புறுவர் உலகத்துத் தையலார்"

என்று கூறினாள் தோழி. இதனால், காவிரிப்பூம் பட்டினத்தில், அந்த நாளிலே காமன் கோயில் இருந்த தென்றும், குலமாதர் அங்குச் சென்று வழி படும் முறை இருந்த தென்றும் நன்றாக விளங்கு கின்றன. இன்றும், தமிழ் நாட்டின் பல பாகங்களில் காமன் பண்டிகை கொண்டாடப்படுகின்றது. 'ஈசனுடைய நெற்றிக் கண்ணால் காமன் எரிந்து போனான்' என்று வாதிப்பாரும், 'அப்படி யில்லை' என்று சாதிப் பாரும் இக் காலத்தும் தமிழ் நாட்டி லுண்டு.

காமம் என்ற சொல்லும், காமன் என்ற பெயரும் தமிழ் நூல்களிலே எடுத்தாளப்பட்டாலும் இன்று அவை இழிந்த பதங்களாகவே எண்ணப்படுகின்றன. காமம் என்பது வடசொல்; இன்பம் என்னும் பொருள் அதற்குண்டு. உறுதிப் பொருள்களைத் "தர்மார்த்த காமமோட்சம்" என்று வடமொழியாளர் கூறுவர். இவ் வடமொழித் தொடருக்கு நேரான தமிழ்

"அறம் பொருள் இன்பம் வீடு" என்பது. எனவே, காமம் என்பது இன்பம் என்ற பொருளைத் தருகின்றது. திருவள்ளுவர் காலத்தில் காமம் இழிந்த சொல்லாகக் கருதப்படவில்லை என்று தெரிகின்றது. அறம் பொருள் இன்பம் என்ற முப்பாலைப் பற்றி எழுதிய திருவள்ளுவர் இன்பப் பகுதிக்குக் காமத்துப் பால் எனப் பெயரிட்டார் என்றால், அவர் காலத்தில் காமம் இழிந்த சொல்லாகக் கருதப்படவில்லை என்பது தெரிகின்றதல்லவா?

ஆயினும், கால கதியில் காமம் என்பது துன்மார்க்கத்திற் பெறும் இன்பத்தைக் குறிப்பதாயிற்று. காமி, காமுகன் முதலிய சொற்கள் தூர்த்தன் என்ற பொருளிலே வழங்குகின்றன. காமுகன், கல்வி கற்பதற்கும் தகுதியற்றவன் என்று நன்னூல் கூறுகின்றது.

இனி, காதலுக்கும் கற்புக்கும் உள்ள தொடர்பைச் சிறிது பார்ப்போம்: காதல் என்பது உணர்ச்சி; கற்பு என்பது ஒழுக்கம். உணர்ச்சியால் ஒன்றுபட்ட நம்பியும் நங்கையும் (தலைமகனும் தலைமகளும்) ஒருவரை யொருவர் தமக்கே உரியவராகக் கொண்ட நிலையிலே தோன்றும் ஒழுக்கமே கற்பு என்பர்.

சீதையின் காதலில் வைத்து இந்த உண்மையைக் காட்டுகின்றார் கம்பர். மிதிலை மாநகரத்தில், கன்னிமாடத்தின் மேடையிலே நின்ற சீதையும், வீதியின் வழியாகச் சென்ற இராமனும் தற்செயலாக ஒருவரையொருவர் நோக்கினர். இருவர் கண்ணுேக்கும் ஒத்தது; காதல் பிறந்தது. காதலர் இருவரும் ஒருவர் இதயத்தில் ஒருவர் புகுந்து உறைவாராயினர்.

இந்த நிலையில் இராமன் தன்னுடன் வந்த தம்பியோடும் முனிவரோடும் வீதியிற் சென்று மறைந்துவிடுகின்றான். அவன் இன்னான் என்று அறியாள் சீதை. அவன் எங்கே சென்றான் என்பதும் உணராள்; ஆயினும், அவனையே கருத்தில் அமைத்துக் கரைந்து உருகுகின்றாள். அந்த வேளையில் ஓடிவருகின்றாள் அவள் தோழியாகிய நீலமாலை; ஆனந்தமுற்று ஆடுகின்றாள்; பாடுகின்றாள். "தோழீ! என்ன செய்தி?" என்று கேட்கின்றாள் சீதை. அப்போது தோழி சொல்கின்றாள்: "அயோத்தி அரசனுடைய மைந்தன்; அஞ்சன வண்ணன்; செந்தாமரைக் கண்ணன்; அவன், தம்பியோடும் முனிவரோடும் நம் மாளிகைக்கு வந்தான்; உன் திருமணத்திற்காக வைத்திருந்த வில்லைக் கண்டான்; எடுத்தான்; வளைத்தான்; ஒடிந்தான்" என்று கூறி முடிக்கின்றாள்.

அப்பொழுது சீதையின் மனம் ஊசலாடத் தொடங்கிற்று; கவலையும் உண்டாயிற்று. வில்லை எடுத்து வளைத்து ஒடித்த வீரன், தான் கன்னி மாடத்திலிருந்து கண்ட ஆடவனோ? அல்லனோ? என்ற ஐயம் பிறந்தது. அவனாகத்தான் இருக்கவேண்டுமென்று ஒருவாறு மனத்தைத் தேற்றிக்கொண்டு, தோழி சொல்லிய அடையாளங்களை மீளவும் நினைத்துப் பார்த்தாள்.

*"கோமுனி யுடன்வரு கொண்டல் என் றபின்*
*தாமரைக் கண்ணினன் என்ற தன்மையால்*
*ஆம்அவ னேகொல்என் று ஐயம் நீங்கினாள்."*

ஆனால், நொடிப்பொழுதில் மற்றொரு கருத்து அவள் மனத்தில் புகுந்தது. "என் தோழி சொல்லிய

அடையாளங்கள் எல்லாம் உடைய மற்றொருவன் வில்லை வளைத்து ஒடித்திருந்தால் நான் என்ன செய்வேன் ?'' என்று அவள் எண்ணினாள் ; ஏங்கினாள்.

அந்த ஏக்கத்தினிடையே ஓர் ஊக்கம் பிறந்தது ; உணர்ச்சியினிடையே ஒழுக்கம் எழுந்தது. காதல், கற்பாக உருவெடுத்தது. " அவன் அல்லனேல் இறப்பேன் " என்று சீதை முடிவு செய்தாள். ' கண்ணுற் கண்ட காதலனும் வில்லை ஒடித்த வீரனும் ஒருவனே யாயின் அவனை மணம் புரிந்து வாழ்வேன் ; இல்லா விட்டால் இறந்து படுவேன் ' என்று உறுதிகொண்டாள் சீதை. கற்பு நெறி என்பது இதுதான். காதலனை யன்றி மற்றோர் ஆடவனை மனத்திலும் கருத ஒருப்படாத உறுதியே கற்பு எனப்படும். இதையே திருவள்ளுவர் வியந்து பாடினார்.

> " பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
> திண்மைஉண் டாகப் பெறின் "

என்பது அவர் திருவாக்கு.

கற்புடைய மாதரிடம் மென்மையும் உண்டு ; மனத் திண்மையும் உண்டு. பொறுக்கும் திறமும் உண்டு ; மாறுபட்டோரை ஒறுக்கும் திறமும் உண்டு. சிலப்பதிகாரத்தின் கதாநாயகியாகிய கண்ணகியிடம் இவ்விரு தன்மையையும் பார்க்கின்றோம். கொண்ட கணவன் அவளுக்குக் கொடுமை செய்தான் ; செல்வத்தை யெல்லாம் செலவழித்தான். அல்லும் பகலும் அயலார் அறியாமல் கண்ணீர் வடித்தாள் கண்ணகி ; மங்கல அணியைத் தவிர மற்றைய நகைகளை யெல்

லாம் மறந்தாள்; தன்னை அழகு செய்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்தை அறவே துறந்தாள்.

> " அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய
> செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்ப
> பவள வாள்நுதல் திலகம் இழப்ப
> மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்
> கையறு நெஞ்சத்துக் கண்ணகி "

என்று கூறுகின்றது சிலப்பதிகாரம். அடக்கமும் பொறுமையும், கற்பும் கண்ணீரும் கண்ணகியின் வடிவம். "கண்டார் வெறுப்பனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானை யல்லால் அறியாக் குல மகள்" என்று ஆழ்வார் பாடிய திருப்பாட்டுக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைந்தாள் கண்ணகி.

இத் தகைய மென்மையும் பொறுமையும் வாய்ந்த கண்ணகி, மதுரை மாநகரில் தன் கணவனை இழந்த போது வன்மையின் வடிவம் கொண்டாள். கற்பெனும் திண்மை அவ் வடிவத்திலே களிநடம் புரிந்தது. அத் திண்மையைக் கண்டு திடுக்கிட்டான் அரசன்; அப்பால் அவள் பேசிய திடமொழியைக் கேட்டபோது மயங்கி விழுந்து மாண்டான். தவறு செய்த அரசனைக் கற்பின் திண்மையால் ஒறுத்த கண்ணகி, வீர பத்தினியாகத் தமிழ் நாட்டிலே போற்றப்பட்டாள். அன்று முதல் இன்றளவும் கண்ணகி, மாதர் குலமணி விளக்காய், வீரக் கற்பின் விழுமிய கொழுந்தாய் விளங்குகின்றாள்.

## 12. கண்ணகிக் கூத்து

சிலப்பதிகாரம் என்னும் நாடகக் காவியம் தமிழ் நாட்டு மூவேந்தர்க்கும் உரியதாகும். கதைத் தலைவி யாகிய கண்ணகி சோழ நாட்டிலே பிறந்தாள்; பாண்டி நாட்டிலே தன் கற்பின் பெருமையை நிறுவினாள்; பின்பு சேரநாடு போந்து வானகம் எய்தினாள். ஆகவே, நூலாசிரியர், சேர சோழ பாண்டியர்கள் ஆண்டு வந்த முந் நாட்டின் பெருமையையும் முறை யாக எடுத்துரைக்கின்றார். இவ் வுண்மை,

> *" முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது*
> *அடிகள் நீரே அருளுக "*

என்று சீத்தலைச் சாத்தனார் இளங்கோவடிகளை நோக் கிக் கூறுமாற்றால் இனிது விளங்கும். இவ்வாறு, முந் நாட்டின் பெருமையையும் எழுதப் போந்த ஆசிரியர் அவற்றின் அரசியல் முறைகளையும், சமய நெறிகளை யும், பிறவற்றையும் குறிப்பாகக் கூறியருளினார். ஆகவே, முந் நாட்டின் நீர்மையையும் ஒருங்கே எடுத் துரைக்கும் நூல் தமிழ் மொழியில் சிலப்பதிகாரம் ஒன்றேயாகும்.

மூவேந்தர்க்கும் உரிய நூலாக விளங்கும் சிலப்பதி காரம் முத்தமிழ் நயங்களும் அமைந்த அரிய நூலாக வும் திகழ்கின்றது. இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழில் இயற்றமிழ், இனிய சொற்களால் மாந்தர் அறிவினைக் கவர்ந்து உயரிய இன்பம் அளிப்பதாகும். இசைத் தமிழ், செவியின் வாயிலாக உள்ளத்தைக் கவர்ந்து உலப்பிலா இன்பம் பயப்பதாகும். நாடகத்

தமிழ், இயற்றமிழின் அழகையும், இசைத் தமிழின் சுவையையும், காட்சியின் நலத்தோடு கலந்தளித்து மனத்தை மகிழ்விப்பதாகும். நாடகசாலைக்குச் செல்வோர், மணிமுடி தரித்த மன்னரும், மதிநலஞ் சான்ற அமைச்சரும், வெம்படை தாங்கிய வீரரும், நல்லணி புனைந்த நங்கையரும், பிறரும் அரங்கத்தில் நடிக்கக் கண்டு களிப்புறுவர்; பண்ணுார்ந்த பாட்டின் இசை கேட்டு இன்புறுவர்; நாடகக் கதையில் அமைந்துள்ள கருத்தினை அறிந்து நலமுறுவர். இவ்வாறு கற்றோர்க்கும் மற்றோர்க்கும் இன்பமும் பயனும் ஒருங்கே எய்துவிக்கும் தன்மையாலேயே தமிழ்நாட்டு அறிஞர் நாடகத் தமிழைப் போற்றி வளர்ப்பாராயினர்.

மாந்தரை ஒழுக்க நெறியில் நிறுத்துதற்கு நாடகம் ஒரு சிறந்த கருவியாகும் என்பர். நல்ல நாடகங்களைக் காணும் மக்கள் அறத்தாறறிந்து ஒழுகத்தலைப்படுவர். உயிர்க்கு நலம் பயக்கும் உயரிய உண்மைகளைக் கொண்ட கதைகளே முற்காலத்தில் நாடக மேடைகளில் நடிக்கப் பட்டமையால், மக்கள், பெரும்பாலும் நன்மையில் நாட்டமும், தீமையில் அச்சமும் உடையராய் வாழ்ந்தார்கள். ஆனால், இக்காலத்தில், புன்னெறிப்பட்டோரை இன்புறுத்திப் பொருள் கவரும் நோக்கமே பெரும்பாலும் நாடக சாலையை இயக்குகின்றது. அதனாலேயே, தற்காலத்தில் நாடகங்களைக் காண்பதுவும் தீதென்று தக்கோர் கருதுகின்றனர்.

தமிழ்நாட்டு நாடக மேடையில் நடைபெறும் கோவலன் என்னும் நாடகம் பழந்தமிழ்க் காவிய

மாகிய சிலப்பதிகாரத்திலுள்ள சிறந்த கதையைத் தழுவி எழுந்ததாகும். ஆயினும், நாடகக் கண்ணகிக்கும் காவியக் கண்ணகிக்கும் உள்ள வேற்றுமை புல்லுக்கும் நெல்லுக்கு முள்ள வேற்றுமையைப் போன்றது. கோவலனைக் 'கோவிலன்' என்றும், கண்ணகியைக் 'கர்னகி' என்றும் சிதைத்து வழங்கும் சிறுமை ஒரு புறமிருக்க, கற்பின் கொழுந்தாகிய கண்ணகி, நாடக மேடையில் ஆவேசமுற்று வெறியாட்டயர்வதும், தவறிழைத்த பாண்டியன் மார்பைப் பிளந்து அவன் குடரை மாலையாக அணிந்து குருதியிலே திளைத்துக் கூத்தாடுவதும், அருவருக்கத் தக்க காட்சி யன்றே? பெண்மைக்குரிய நாணமும் மென்மையும் அமைந்த நல்லியற் கண்ணகியை அலகை போல் அலற வைத்தல் அழகாகுமோ? காளியாட்டங் கண்டு கல்லார் உள்ளங் களிக்கும் என்னும் காரணத்தால் கண்ணகியின் மென்மையை அழித்தல் முறையாகுமோ? அன்றியும், நீதி வழுவா நெறி முறையில் நின்ற நெடுஞ்செழியனது உயிரை வலிந்து பிழிதலும் வேண்டுமோ? நீதி தவறியது என்று அறிந்த பின்னர் அவ் வரசன் உயிர் வாழ இசைவானோ?

நாடகக் கண்ணகியின் தன்மை இவ்வாறாக, காவியக் கண்ணகியின் செம்மையையும் மேன்மையையும் சிறிது காண்போம்: மதுரை மாநகரில் கோவலன் கொலையுண் டிறந்தான் என்றறிந்த கண்ணகி, பாண்டிய மன்னனிடம் வழக்குரைத்து, நீதியை நிலை நிறுத்துமாறு அவன் மாளிகையினுள்ளே சென்றாள். காவி மலரனைய கண்கள் கண்ணீர் சொரிய, கருங்

கூந்தல், விரிந்து கிடக்க, ஒற்றைச் சிலம்பைக் கையி லேந்திக் கொற்றவன் முன்னே போந்த கண்ணகி யின் கோலத்தை,

*"மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்*
*கையில் தனிச்சிலம்பும் கண்ணீரும்"*

என்று சிலப்பதிகாரம் உருக்கமாக உரைக்கின்றது. கண்ணீர் உகுத்துநின்ற கண்ணகியைப் பாண்டியன் குழைந்து நோக்கி, 'மனம் வருந்தி வந்த மாதே! நீ யார்?' என்று வினவினான். அதற்கு மாற்ற முரைக்கப் போந்த மங்கை, "அரசே! கன்றை இழந்த பசு ஒன்று மனங்கரைந்து கண்ணீர் வடிக்கக் கண்டு, அவ் ஆன் கன்றைக் கொன்ற தன் அருமந்த மைந்தன் மீது தானே தேராழி ஊர்ந்து முறைசெய்த சோழ மன்னனது புகழமைந்த புகார் நகரமே என் பதியாகும். அந் நகரில் மாசாத்துவானுக்கு மகளாய்த் தோன்றி, ஊழ்வினைப் பயனால் உன் நகரிற் புகுந்து, என் சிலம்பை விற்கப் போந்த வீதியில் உன் ஆணையால் கொலையுண்டிறந்த கோவலன் மனைவியே யான்" என்று கொதித்துக் கூறினாள். அப்பொழுது அரசன், "மாதே! கள்வனைக் கொல்லுதல் கொடுங் கோலன்று. அது நீதியின் நெறியேயாகும்" என்று நேர்மையாய் உரைத்தான்.

கோவலன் குற்றமற்றவ னென்றும், அவனைக் குற்றவாளி என்று கொன்ற கொற்றவன் தவறிழைத் தான் என்றும் ஐயந்திரிபற விளக்க வந்த கண்ணகி காவலனை நோக்கி, "அரசே! என் கணவன் கள்வ னல்லன்; அவனிடம் இருந்த சிலம்பு அரண்மனைச் சிலம்பன்று. அதன் இணைச்சிலம்பு இதோ, என்

கையில் உள்ளது! இதனுள்ளே அமைந்த பரல் மாணிக்கம்'' என்று திறம்பட உரைத்தாள். அப்பொழுது மன்னவன் மனம் பதைத்து, தன் காவலாளர் கோவலனிடமிருந்து கொணர்ந்த சிலம்பினை எடுத்து வந்து, கண்ணகியின் முன்னே வைத்தான். அச் சில்லரிச் சிலம்பைக் கண்ணகி தன் செங்கையால் எடுத்து நோக்கிக் காவலன் கண்ணெதிரே உடைத்தாள். சிலம்பின் உள்ளே இருந்த மாணிக்கம் விரைந்தெழுந்து அரியணை மீதமர்ந்திருந்த அரசனிடம் தானே நேராகச் சென்று பகர்வதுபோல் அவன் முகத்தில் தெறித்தது. தெறித்து விழுந்த மாணிக்கத்தைக் கண்டான் மன்னன். அந் நிலையில் அவன் வெண்குடை தாழ்ந்தது; செங்கோல் தளர்ந்தது. 'பொற் கொல்லன் சொற் கேட்டுப் பிழை செய்த யானோ அரசன்? யானே கள்வன்; இதுகாறும் என் வழிமுறையில் இத் தகைய பிழை செய்தார் எவருமிலர். இன்றே என்னுயிர் முடிவதாக' என்று அவன் மயங்கி மண்மீது விழுந்தான். விழுந்த மன்னன் எழுந்தா னல்லன்.

'' தாழ்ந்த குடையன் தளர்ந்த செங் கோலன்
'பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட
யானோ அரசன் ? யானே கள்வன் !
மன்பதை காக்கும் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது ; கெடுகஎன் னாயுள்' என
மன்னவன் மயங்கி வீழ்ந்தனனே ''

என்று சிலப்பதிகாரம் இரங்கிக் கூறுகின்றது. காவலன் மயங்கி விழுந்து மாண்டதைக் கண்ட கோப்பெருந் தேவி, கணவனை இழந்து நின்ற கண்ணகியின் அடி பணிந்து பிழை பொறுக்குமாறு வேண்டினாள்.

இங்ஙனம் அறநெறி பிழைத்த அரசனுக்குஅறமே கூற்ருக அமைந்தது. 'அல்லவை செய்தார்க்கு அறம் கூற்றமாம்' என்பது தமிழ் நாட்டு அரசியற் கொள்கையாகும். இவ் வுண்மையை உணர்த்துதல் சிலப்பதிகாரத்தின் குறிக்கோள் என்பது,

"அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற் ருவதும்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டு மென்பதும்
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதிகாரம் என்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்"

என்ற அழகிய அடிகளால் அறியப்படும். அரசியல் பிழைத்தோரை அறமே ஒறுக்கு மென்றும், கற் பமைந்த மாதரை மக்களும் தேவரும் போற்றுவ ரென்றும், வினையின் பயனை விலக்கலாகா தென்றும், இவ் வுலக மாந்தர் அறிந்து வாழுமாறே இளங்கோ வடிகள் சிலப்பதிகாரம் இயற்றினர் என்பது இதனல் இனிது விளங்கும். இவ் வுண்மைக்கு முற்றும் மாருக அரசியல் பிழைத்த பாண்டியன் அறத்தால் ஆவி துறவாது, கண்ணகியின் மறத்தால் ஆவி துறப்பதை நாடக மேடையிலே காண்கின்ருேம்! கணவனை கோவலனையன்றி ஆடவர் எவரையும் சிந்தையாலும் தொடாச் செம்மை வாய்ந்த கண்ணகி, பாண்டியன் மெய்தீண்டி, அவன் மார்பைப் பிளந்து, உயிரைப் பருகப் பார்க்கின்ருேம்! இவ்வாறு, தமிழ் நாட்டு மன்னர் அறமும், மாதர் கற்பும் நிலை குலையுமாறு நிகழ்த்தப் பெறும் கூத்தைக் கண்டு கல்லார் நெஞ்சம் களிக்கு மெனினும் பழந் தமிழ் நாட்டின் பெருமை பாழ்படுவதைக் கண்டு பயனறிந்தோர் வருந்துவர்.

# 13. சிலம்பின் காலம் *

தமிழ் நாட்டார் போற்றும் ஐம்பெருங் காவியங்களுள் தலைசிறந்தது சிலப்பதிகாரம். பழந்தமிழ் நாட்டின் சீர்மைக்கும் செம்மைக்கும் சான்றாக நிற்பது அப் பெருங் காவியம். சோழநாட்டின் செழுமையும் பாண்டிய அரசாட்சியின் சிறப்பும், சேரநாட்டரசனது வீரமும் அக் காவியத்திலே விளங்கக் காணலாம்.

இத் தகைய சிலப்பதிகாரம் எப்பொழுது தமிழ் நாட்டில் எழுந்தது? அதைப் பாடிய இளங்கோவடிகள் எப்பொழுது தமிழ்நாட்டில் வாழ்ந்தார்? அவருடன் பிறந்த செங்குட்டுவன் எப்பொழுது அரசு வீற்றிருந்தான்? இவற்றைச் சிறிது பார்ப்போம்:

சிலப்பதிகாரத்தைப் பொது நோக்காகப் பார்க்கும் பொழுது, தமிழ்நாடு சிறந்த நிலையில் இருந்த காலமே சிலப்பதிகாரக் காலம் என்று தோன்றுகின்றது. சேர சோழ பாண்டியர்கள் தமிழ்நாட்டை யாண்ட காலம் அது. இயல் இசை நாடகமென்னும் முத்தமிழும் செழித்து வளர்ந்த காலம் அது. கடல் வழியாக நிகழ்ந்த வாணிகத்தால் தமிழ்நாட்டிலே செல்வம் பெருகி நின்ற காலம் அது.

அக் காலத்தில் காவிரிப்பூம் பட்டினம் சோழ நாட்டின் சிறந்த துறைமுக நகரமாகத் திகழ்ந்தது.

---

* சென்னை வானொலி நிலையத்திலே பேசியது. நிலையத்தார் இசைவு பெற்றுச் சேர்க்கப்பட்டது.

காவிரியாறு கடலொடு கலக்குமிடத்தில் வளமும் அழகும் வாய்ந்து விளங்கிற்று அந் நகரம். பட்டினம் என்னும் சொல், சிறப்பு வகையில் காவிரிப்பூம் பட்டினத்தையே குறிப்பதாயிற்று. இக்காலத்தில் பட்டணம் என்பது சென்னப்பட்டணத்தைக் குறிப்பதுபோன்று, அக் காலத்தில் பட்டினம் என்னும் பெயர் காவிரிப்பூம் பட்டினத்திற்கு வழங்கிற்று. அழகு வாய்ந்த அப் பட்டினத்தைக் கவிகள் பூம்புகார் நகரம் என்றும் அழைத்தார்கள். "பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்" என்று பட்டினத்தைப் பாடினார் சிலப்பதிகார ஆசிரியர்.

அந்நகரின் துறைமுகத்தில் ஏற்றுமதியும் இறக்குமதியும் இடையறாது நடந்தன. தமிழ் நாட்டாரோடு வாணிகம் செய்து வளம் பெற்ற யவனர் என்ற கிரீக்கர்கள் காவிரிப்பூம் பட்டினத்தின் கடற்கரையில் விண்ணளாவிய மாடங்கள் கட்டிக் குடியிருந்தார்கள். தெய்வ மணமும் அந் நகரிலே கமழ்ந்துகொண்டிருந்தது. சிவன் கோயில், முருகன் கோயில், பெருமாள் கோயில், வாசவன் கோயில்—இன்னும் பல கோயில்கள் அங்கு நின்று அணி செய்தன. 'இந்திரன் திருநாள்' கோலாகலமாக இருபத்தெட்டு நாள் கொண்டாடப்பட்டது. இங்ஙனம் காவிரிப்பூம் பட்டினம் பொருள் வளமும், தெய்வ நலமும் பெற்று விளங்கிய காலமே சிலப்பதிகாரக் காலம்.

அக் காலத்தில் சேர நாட்டை ஆண்டவன் ஒரு சிறந்த மன்னன். செங்குட்டுவன் என்பது அவன் பெயர். கற்புத் தெய்வமாய கண்ணகி தன் நாட்டில்

வந்து விண்ணுலகம் அடைந்தாள் என்று அறிந்த செங்குட்டுவன் அவளுக்குத் தன் தலை நகரத்தில் ஒரு கோயில் கட்டினன்; இமயமலையிலிருந்து சிலை எடுத்து வந்து, கண்ணகியின் திருவுருவம் செய்து, அக் கோயிலில் நிறுவினன் ; அத் திருவிழாவைக் காண அயல் நாட்டு அரசர் சிலரை அழைத்திருந்தான்.

" அருஞ்சிறை நீங்கிய ஆரிய மன்னரும்
பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னரும்
குடகக் கொங்கரும் மாளுவ வேந்தனும்
கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும் "

அங்கு வந்திருந்தார்கள் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது.

இக் காட்சிகளை யெல்லாம் கண் களிப்பக் கண்டார் செங்குட்டுவன் தம்பியாகிய இளங்கோ. அவர் செந்தமிழ்ச் செல்வர் ; இளவரசுக்குரிய பதவியை உதறி யெறிந்து, முனிவராயிருந்து தவம் புரிந்தவர். அவர் அரச குலத்திற் பிறந்த பெருமையும், துறவு பூண்டு ஆற்றிய தவத்தின் அருமையும் தோன்ற அவரை ' இளங்கோ அடிகள் ' என்று தமிழுலகம் பாராட்டுவதாயிற்று. சிலப்பதிகாரம் பாடியவர் அவரே. இளங்கோ அடிகள் இயற்றிய காவியத்தை, 'நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரம்' என்று போற்றினர் பாரதியார்.

" சேரன் தம்பி சிலம்பை இசைத்ததும்
தெய்வ வள்ளுவன் வான்மறை கண்டதும்
பாரில் நல்லிசைப் பாண்டிய சோழர்கள்
பாரளித்ததும் தருமம் வளர்த்ததும்
..........................................
அன்ன யாவும் அறிந்திலர் பாரதர்
ஆங்கி லம்பயில் பள்ளியுட் போகுநர் "

வரலாற்றால் விளங்குகின்றது. மணிமேகலை என்னும் தமிழ்க் காவியம் எழுந்த காலத்தும் பௌத்த மதம் தலையெடுத்து நின்றதாகவே தெரிகின்றது. அக் காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த புத்த சங்கத்தில் அறவணவடிகள் என்னும் பௌத்த முனிவர் விளங்கினார். அவர் சிறந்த சீலர். கோவலன் கொலையுண்டு இறந்த பின்னர் அவன் காதலியாகிய மாதவியையும், அவன் மகள் மணிமேகலையையும் பௌத்த சமயத்தில் சேர்த்தவர் அவரே. இன்றும் அவர் பெயர் காஞ்சிபுரத்தில் நிலைபெற்றிருக்கின்றது. அவர் தங்கியிருந்து தவம் புரிந்தமையால் அறவணன் சேரி என்று பெயர் பெற்ற தெரு இப்பொழுது அறப்பணஞ்சேரி என்று அந் நகரில் வழங்குகின்றது.

சாக்கிய மதம் சிறந்திருந்த காலத்தில், சிதம்பரத்தில் வாழும் தில்லை மூவாயிரவரோடு சமய வாதம் செய்வதற்காகப் பௌத்த முனிவர்கள் திரண்டு போந்தார்கள் என்றும், அப்பொழுது, அங்கிருந்த மாணிக்கவாசகர் அம் முனிவர்களுடன் வாது செய்து அன்னாரைச் சைவ சமயத்திற் சேர்த்துவிட்டார் என்றும் சரித்திரம் கூறுகின்றது. ஆகவே, மாணிக்கவாசகர் காலத்திற்குப் பின்பு பௌத்த மதம் தமிழ் நாட்டில் ஆதிக்க மிழந்துவிட்ட தென்று சொல்லலாம். சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே சீன தேசத்திலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்த யூன்சியாங் என்பவர், பௌத்த மதம் தளர்ச்சியுற்றுத் தாழ்வடைந்திருந்த நிலையைக் குறித்து வருந்தி எழுதியுள்ளார். எனவே, மணிமேகலை எழுந்த காலத்தில் ஓங்கி நின்ற

பௌத்த மதம், ஏழாம் நூற்றாண்டில் தளர்ந்து தாழ்ந்துவிட்டதென்று தோன்றுகிறது.

ஆயினும், அம் மதத்தைச் சார்ந்தவர் ஆங்காங்கு இல்லாமற் போகவில்லை. திருஞான சம்பந்தர் காலத்தில், இப்பொழுது பாண்டிச்சேரி என்று வழங்கும் புதுச்சேரிக் கருகே போதிமங்கை என்ற ஊர் இருந்தது. அங்குப் பௌத்த சமயத்தார் பெருந்தொகையினராக வாழ்ந்தனர். சாக்கிய நூல்களையும் தருக்க நூல்களையும் நன்கு கற்று வாது புரிய வல்லார் பலர் அவ் வூரில் இருந்தனர். திருஞானசம்பந்தர் சிவனடியார்களோடு அவ் வூரைக் கடந்து செல்லும்போது சாரிபுத்தர் என்னும் சாக்கிய முனிவர் அவரை வாதுக்கு அழைத்தார். அவ் வூர்ச் சத்திரத்தில், சாரிபுத்தருக்கும் திருஞானசம்பந்தருக்கும் வாக்குவாதம் நிகழ்ந்தது. அவ் வாதத்தில் தோல்வியுற்ற சாரிபுத்தரும் அவரைச் சார்ந்த பௌத்தரும் சைவ சமயமே மெய்ச் சமயம் எனத் தெளிந்து, திருஞான சம்பந்தர் அடிகளில் விழுந்தெழுந்து சைவராயினர் என்று பெரிய புராணம் கூறுகின்றது.

தமிழ்நாட்டுப் பெருவேந்தருள் ஒருவனாகிய இராஜராஜ சோழன், நாகப்பட்டினத்தில் ஒரு புத்த ஆலயம் கட்டுவதற்கு அனுமதி யளித்ததோடு, அதற்கு நன்கொடையும் வழங்கினான் என்பது சரித்திரத்தால் அறியப்படுகின்றது. இன்னும், வீர சோழன் என்ற பட்டப் பெயர் பூண்ட வீர ராஜேந்திரன் அரசாண்ட காலத்தில், பௌத்த சமயத்தினராகிய 'புத்தமித்திரன்' என்னும் புலவர் தமிழில் ஓர்

இலக்கணம் செய்தார். அந் நூல் வீரசோழியம் என்று பெயர் பெற்றது.

பௌத்த சமயக் கொள்கைகள் மணிமேகலை, குண்டலகேசி முதலிய நூல்களில் விளக்கப்பட்டுள்ளன. 'பிறப்பென்பது துன்பம்; பிறவாமையே இன்பம்' என்பது அச் சமயத்தின் அடிப்படைக் கொள்கை. அப்படியாயின், பிறப்பை எப்படி ஒழிப்பது? 'அகப்பற்று, புறப்பற்று என்னும் இருவகைப் பாசமும் பிறப்பிற்கு வித்து; பற்று அற்றால் பிறப்பு ஒழியும்' என்பது பௌத்த சமயத்தின் கருத்து. இவ்வுண்மையை மணிமேகலையிற் காணலாம்.

*" பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்*
*பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்*
*பற்றின் வருவது முன்னது; பின்னது*
*அற்றோர் உறுவது அறிக"*

என்று உறுதியிட்டுக் கூறப்படுகின்றது. எனவே, 'எல்லாவற்றையும் துறந்தவரே சிறந்தவர்' அவரே பேரின்பமடையும் பெற்றி வாய்ந்தவர்' என்னும் கருத்துப் பௌத்த சமய வாதிகளால் இந் நாட்டில் நன்கு பரப்பப்பட்டது. இல்லறம், துறவறம் என்னும் இருவகை அறங்களுள் துறவறமே சாலச் சிறந்த தென்னும் கொள்கை பௌத்த மத போதனையால் தமிழ் நாட்டில் ஊற்றம் பெற்றது. அப் போதனையாலேயே இள நங்கையாகிய மணிமேகலையும், அவள் தாயும், பிறரும் துறவுநிலை யடைந்தார்கள்.

துறவறத்தை மேற்கொண்ட புத்தர், கொல்லாமை என்னும் அறத்தின் பெருமையை எல்லார்க்

கும் எடுத்துரைத்தார். அக் காலத்தில், வட நாட்டில், பலவகையான யாகங்கள் நடந்து வந்தன. அசுவ மேத யாகம், கோமேத யாகம் முதலிய வேள்விகள் செய்து, குதிரைகளையும் பசுக்களையும் அரசர்கள் பலி கொடுத்தார்கள். பிம்பசாரன் என்ற அரசன் பல பசுக்களைக் குறியிட்டுக் கோமேத யாகம் செய்யக் கருதியதைக் கேள்வியுற்று, புத்தர், அவன் அரசு புரிந்த நகரத்திற்கு விரைந்து சென்றார்; கொல்லாமை யாகிய அறத்தின் பெருமையை அவன் உள்ளங் கொள்ள எடுத்துரைத்தார். புத்தர் உருக்கமாகப் பேசிய வாய்மொழியைக் கேட்ட பிம்பசாரன் மனம் மாறினன்; யாகத்தை நிறுத்தினன்; அன்று முதல் கொல்லாமை என்னும் நல்லறத்தை மேற்கொண்டு வாழ்ந்தான். இவ்வாறு புத்தர் சரிதம் கூறுகின்றது.

இங்ஙனம் வடநாட்டில் புத்தர் செய்த நற்போதனையைத் தென்னாட்டில் திருவள்ளுவர் செய்தார்.

> " நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
> கொன்றாகும் ஆக்கம் கடை "

என்று திருக்குறள் திருத்தமாகக் கூறுகின்றது. தமிழ் நாட்டில் நடந்த கோமேத யாகம் ஒன்று மணிமேகலையிற் குறிக்கப்படுகின்றது. அழகான ஒரு பசு: அதன் கொம்புகளில் மாலை சுற்றி அலங்கரிக்கப்பட்டிருந்தது. மறுநாள் நிகழ நின்ற தீமையையறிந்து அப் பசு அங்கமெல்லாம் பதறிற்று; வாய் விட்டுக் கதறிற்று; கண்ணீர் வடித்தது. அதனைக்

கண்டான் ஆபுத்திரன் என்ற சிறுவன்; எவ்வாற்ருனும் அந் நல்லுயிரைக் காப்பாற்றக் கருதினன்; அன்றிரவு காரிருளில் எல்லோரும் கண்ணுறங்கும் வேளை பார்த்து, அப் பசுவைக் கட்டவிழ்த்துக் காட்டுக்குள்ளே ஓட்டிச் சென்ருன். யாகப் பசுவைக் காணுத வேதியர்கள் நாற்றிசையும் விரைந்து ஓடினர்கள்; தேடினர்கள்; காட்டிலே அதைக் கடத்திச் சென்ற ஆபுத்திரன்மீது சாடினர்கள். அந் நிலையில் பசுவுக்காகப் பரிந்து பேசலுற்ருன் ஆபுத்திரன். தன்னைப் பிடித்து அடித்தவரை நோக்கி, "ஐயரே! இப் பசு உமக்கு என்ன தீங்கு செய்தது? என்ன பாவம் பண்ணிற்று? அரசன் விட்ட நிலத்தில் மழையால் முளைத்துத் தழைத்த புல்லை மேய்கின்றது; இனிய நல்ல பாலை எல்லோர்க்கும் தருகின்றது. இத்தகைய பசுவை ஏன் கொல்ல வேண்டும்?"

"விடுநில மருங்கில் படுபுல் லார்ந்து
நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாள் தொட்டுச் சிறந்ததன் தீம்பால்
அறந்தரு நெஞ்சொடு அருள்சுரந் தூட்டும்
இதனெடு வந்த செற்றம் என்னை?"

என்று வினவினன். இவ்வாறு பசுக்கொலையை மறுத்த பாலனே மதுரையம்பதியில் சிந்தாதேவியால் அமுத சுரபி என்னும் அக்ஷய பாத்திரம் அளிக்கப் பெற்ருன் என்றும், அப் பாத்திரத்தின் உதவியால் ஊர் ஊராகச் சென்று பசித்தோர்க் கெல்லாம் வயிருரச் சோறிட்டு அறம் வளர்த்தான் என்றும் மணிமேகலை கூறுகின்றது.

பௌத்த மதம் அக் காலத்தில் பல நாடுகளிற் பரவியதற்கும், இக் காலத்திலும் பெருஞ் சமயமாக நிலைத்திருப்பதற்கும் சிறந்த காரணம் அதன் சங்கமே யாகும். பௌத்த துறவிகளுடைய கூட்டத்திற்குச் சங்கம் என்பது பெயர். முதன்முதல் காசி நகரத்தில், புத்தர் ஐந்து முனிவருக்கு உபதேசம் செய்து சங்கத்தைத் தொடங்கினார். பின்னர், அது வளர்ந்து பல்லாயிரக் கணக்கான துறவியரை யுடையதாயிற்று. பௌத்தர்கள் புத்தரையும், தருமத்தையும், சங்கத்தையும் மும்மணிகளாகப் போற்றுகின்றார்கள். தமிழ் நாட்டில் சங்கம் என்ற சொல்லுக்கு ஏற்றமளித்தவர் பௌத்தரே என்று கூறுதல் மிகையாகாது. சங்கம் நிறுவிப் பௌத்த சமயத்தை வளர்த்தார் புத்தர். அம் முறையில், பாண்டிய மன்னர்கள் தென்னாட்டில் மூன்று சங்கங்கள் நிறுவி முத்தமிழையும் வளர்த்தார்கள். பௌத்த சமயத்தில் சங்கத்திற்கு எவ்வளவு பெருமையுண்டோ, அவ்வளவு பெருமை தமிழ் நாட்டில் தமிழ்ச் சங்கத்திற்கு உண்டு.

சங்கமே பௌத்த சமயத்தின் ஆணிவேர் என்பதை யறிந்த சைவ சமயத்தார் அம் முறையைத் தாமும் மேற்கொண்டார்கள். சைவம் நன்றாக நிலை பெறுதற் பொருட்டும், எங்கும் பரவுதற் பொருட்டும் திருக்கூட்டம் தமிழ் நாட்டில் ஏற்படுவதாயிற்று. திருக்கூட்டம் என்பது சிவனடியார் சங்கம். சோழ நாட்டின் பழைய தலைநகராகிய திருவாரூரில் அமைந்திருந்த திருக்கூட்டத்தின் செம்மையைப் பெரிய புராணம் எடுத்துரைக்கின்றது; இருவகைப் பாசமும்

அற்றவர்கள் ; ஈசன் திருவடியைப் போற்றும் செல்வமே மெய்ச் செல்வமாகக் கொண்டவர்கள்.

*" மாசி லாதம ணிதிகழ் மேனிமேல்*
*பூசும் நீறுபோல் உள்ளும் புனிதர்கள்*
*தேசி னல்எத் திசையும் விளக்கிறர்*
*பேச ஒண்ணப் பெருமை பிறங்கிஞர் "*

என்று அத் தொண்டர் கூட்டத்தைப் போற்றினர் சேக்கிழார். அத் திருக்கூட்டத்தைக் கண்டார் சுந்தரமூர்த்தி ; ஆர்வம் கொண்டார் ; அன்னார்க்கு அடியவராக ஆசைப்பட்டார். அவ் வாசையால் எழுந்ததே 'திருத்தொண்டத் தொகை' என்னும் அருமைத் திருப்பதிகம். அதன் அடியாகவே பிற் காலத்தில் 'திருத்தொண்டர் புராணம்' என்னும் பெரிய புராணம் தமிழ் நாட்டிலே பிறந்தது. ஆகவே, பௌத்த சங்கத்திற்கு நிகராகிய திருக்கூட்டத்தால் சைவ சமயம் அளவிறந்த நன்மை யடைந்தது என்பதில் ஐயமில்லை.

தமிழ் நாட்டில் அரச மரத்திற்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. அரச மரமும் பிள்ளையாரும் இல்லாத ஊர் இந் நாட்டில் இல்லை என்றே சொல்லலாம். அம் மரத் தைச் சுற்றிவந்து வணங்கும் வழக்கமும் இந் நாட்டில் உள்ளது. முன்னளில் இங்குப் பரவியிருந்த பௌத்த சமயத்தால் அம் மரத்திற்கு இத்துணைச் சிறப்பு ஏற் பட்டதாகத் தோன்றுகின்றது. 'போதி மரம்' என்று சொல்லப்படும் அரச மரத்தின் அடியிலேயே புத்தர் மெய்ஞ்ஞானம் பெற்றார். அதனல், 'போதி நாதர்' என்ற பெயரும் அவருக்கு அமைந்தது. இத் தகைய

புத்தரை அரச மரத்தடியில் வைத்துப் பண்டைத் தமிழர் வணங்கினர். புத்தரொடு சேர்ந்த மரமும் புனித முற்றதாகப் போற்றப்பட்டது. புத்த மதம் இந் நாட்டை விட்டகன்றபோது புத்த பெருமானுடைய திருவுருவங்களும் பெயர்ந்து மறைந்தன. ஆனல், அரச மரத்தின் பெருமை குன்றவில்லை. புத்தர் வீற்றிருந்த இடத்தில் பிள்ளையார் இனி தமர்ந்தார்.

ஆகவே, புத்த மதம் ஆதிக்க மழிந்துபோய்விட்டாலும், அதன் சின்னங்கள் அடியோடு இந் நாட்டில் அழிந்து போகவில்லை. பஞ்ச காவியங்களில் ஒன்ருகிய மணிமேகலை, அதன் பெருமைக்குச் சான்ருக நிற்கின்றது. வீரசோழியம் என்னும் இலக்கண நூல் அம் மதத்தைச் சார்ந்தவரது புலமைத் திறத்தை விளக்கி நிற்கின்றது. போதியின்கீழ் மாதவம் புரிந்த புத்தரின் ஞாபகச் சின்னமாக அரசமரம் சிறப்புற்று விளங்குகின்றது.

# 28. இறையவரும் இன்னுயிரும்

மன்னுயிர் அனைத்தையும் ஆதரித்துக் காக்கும் அருள் நெறியே நன்னெறியெனத் தமிழ்நாடு பழங் காலத்தே அறிந்துகொண்டது. பிற உயிர்க்கு நலம் புரிந்தவர் இன்புறுவ ரென்றும், தீங்கிழைத்தவர் துன்புறுவ ரென்றும் அறநூல் அறிவுறுத்துகின்றது. இவ் வுலகில் வாழும் உயிர்ப் பொருள்கள் பல திறப்பட்ட அறிவு வாய்ந்தன வாயினும், அவற்றுள் ஊடுருவிச் செல்லும் உயிர்த் தன்மை ஒன்றே என்னும் உண்மையைத் தமிழ்ப் பனுவல்களிற் பரக்கக் காணலாம். அறிவாற் குறைந்த உயிர்கள் பல பிறவிக ளெடுத்து மேம்பட்டு, முற்றிய அறிவுடைய உயிர்க ளாகுமென்று பழந்தமிழ் மக்கள் கருதினர்கள். புல் லாகவும் பூடாகவும் நிற்கும் சிற்றுயிர்கள் அறிவு முதிர்ந்து, மக்களாகவும் தேவராகவும் வளர்ந்து செல்லும் தன்மையைத் திருவாசகம் தெள்ளிதின் உணர்த்துகின்றது. இதனாலேயே, புல்லுயிரையும் துன்புறுத்த லாகாதென்று நல்லோர் அருளிப் போந்தனர்.

மக்கள்தம் அறிவின் மதுகையால் ஏனைய உயிர் கள் நலியாவண்ணம் ஆன்றோர் வகுத்துள்ள செவ் விய நெறி அறியத் தக்கதாகும். எல்லாம் வல்ல இறைவனிடம் அச்சமும் அன்பும் என்றென்றும் மக்கட்கு உண்டு என்னும் உண்மையை உணர்ந்த அறிவோர், வன விலங்குகள் முதல் புற்பூண்டுகள் ஈறாக உள்ள எல்லா உயிர்களையும் இறையவரோ டிணைத்து அருள்நெறியை இவ் வுலகில் நிலை

நிறுத்த முயன்றுள்ளனர்; காட்டில் வாழும் விலங்கு களையும், விண்ணிலே பறந்து திரியும் பறவை களையும், மண்ணிலே ஊர்ந்து செல்லும் உயிர் களையும், நீரிலே வாழும் மீன்களையும், நிலத்திலே மருவி நிற்கும் மரஞ் செடிகளையும் இறையவரோ டிணைத்து அவற்றின் உயிரைக் காக்க ஆசைப்பட்டுள் ளார்கள். காட்டில் வாழும் வேழமும் வேங்கையும், அரியும் பரியும், மானும் மற்றைய உயிர்களும் இறைய வர்க்கு உகந்த பொருள்களாகும். வேழத்தின் உரி யும், வேங்கையின் தோலும் ஈசன் உவந்து அணியும் உடைகள். வேங்கையின் தோலை அரையிலுடுத்து, வேழத்தின் உரியால் ஆகத்தைப் போர்த்துக் கடும் பனி யுறையும் கயிலைமா மலையில் சிவபெருமான் வீற் றிருக்கின்றார். இன்னும், விழுமிய வேழம் விண் ணவர் தலைவற்குரிய வாகனமாகும். அன்றியும், ஈச னுடைய தலைமகனாகிய பிள்ளையார் திருமுகம் வேழத் தின் முகமாக விளங்குகிறது ; ஆகவே, உருவத்தால் உயர்ந்த வேழம் ஈசனுக்கும் இந்திரற்கும், பிள்ளை யார்க்கும் இனிய உயிராக இலங்குகின்றது. இத் தகைய யானைக்குத் தீங்கிழைத்தோர் அம் மூவரது சீற்றத்திற்கும் ஆளாவ ரல்லரோ ? இன்னும், ஈசன் தோள்களில் ஆரமாக இலங்கும் நாகம் திருமாலின் பாயலாகவும் அமைந்துள்ளது. ஆகவே, நஞ்சமைந்த நாகமும் இறையவர் இருவரைச் சார்ந்து, இனிது வாழ்கின்றது. விலங்கரசு எனப்படும் அரிமான், காளியின் ஊர்தியாய்க் களித்திருக்கின்றது. பரிமான் பைரவற்கு உகந்ததாயிற்று. கலைமான் ஈசனார் கையில் இனிதமர்ந்தது.

காட்டு விலங்குகளை விடுத்து நாட்டு விலங்குகளைக் கருதுவோமாயின், அவைகளும் இறையவரைச் சார்ந்த உயிர்களாய் இலங்கக் காணலாம். எருது ஈசனது வாகனமாம்; எருமை எமனது ஏற்றமாம். பசுவின் வயிற்றிற் பிறந்தான் சித்திரகுப்தன் என்னும் வானவன். திருமாலும் பன்றியாய்த் தோன்றினன். நன்றி மறவாத நாய் சாத்தனது நல்வாகனமாம். ஆடு அங்கியங் கடவுளுக்கு அமைந்த ஊர்தியாம். ஆகவே, எருதுக்குத் தீங்கிழைத்தால் ஈசன் முனிவான்; எருமைக்குத் தவறிழைத்தால் எமன் விடமாட்டான்; பன்றியைக் கொன்றால் மாயோன் சீறுவான்; நாயை எறிந்தால் சாத்தன் தொடர்வான்; ஆட்டை அடித்தால் அங்கி அடுவான்.

இனி, பறவை இனங்களைச் சிறிது பார்ப்போம்: அன்னமும் கிளியும், சேவலும் மயிலும், குயிலும் கொக்கும், காக்கையும் கலுழனும் ஒவ்வோர் இறைவனை ஒன்றி வாழக் காணலாம். அயன் அன்னத்தின் மீது அமர்ந்தான். மாரவேள் கிளியின்மீது ஊர்கின்றான். குமரவேள் சேவலைக் கொடியாகவும், மயிலைப் பொறியாகவும் உடையான். குயிலை மாரன் தூதனாக்கினான். கொக்கிறகை ஈசன் தன் வேணியில் அணிந்தான். காக்கையைச் சனியன் பிடித்துக் கொண்டான். கலுழனைத் திருமால் கவர்ந்து கொண்டான். ஆகவே, அன்னத்தைத் துன்புறுத்தினால் அயன் சபிப்பான். மழலை பேசும் கிளியைப் பிடித்தால் மாரன் அம்பு தொடுப்பான்; சேவலுக்குத் தீங்கிழைத்தால் முருகன் சீறுவான்; மயிலைப் பிடித்தால் அயில் வேலெடுப்

பான்; குயிலைக் கொன்றால் மாரன் கோபிப்பான்; காக்கையை அடித்தால் சனியன் தொடர்வான்; பருந்துக்குத் தீங்கிழைப்போர் மாயோன் நேமிக்கு விருந்தவர். எனவே, பறவை இனங்களும் பெரியாரைச் சார்ந்து அச்சமின்றி வாழ்கின்றன.

இன்னும் சிறிய உயிர்களாய அணிலும், ஆடும், குரங்கும், கழுதையும் பெரியார் அருளால் பெருமையுற்று விளங்கக் காணலாம். அணிற்பிள்ளை, காலத்தில் உதவி செய்து இராமனது அருளைப் பெற்றது. ஆடுவோ, பிள்ளையார் வாகனமாய்ப் பெருமை யுற்றது. வானரம், இராமனுக்குத் துணை புரிந்து உயர்ந்தது. கத்தும் கழுதையோ, மூத்தாள் வாகனமாய் அமைந்தது. திருமால் மச்சாவதாரம் கொண்டமையால், மீன் இனங்களையும் ஈனமென் றெண்ணி ஊறு செய்தல் ஆகாது.

இனி, மரங்களின் உயிரை ஆன்றோர் பாதுகாத்த மாண்பும் அறிந்து மகிழத் தக்கதாகும். இனிய நிழல் தரும் மரங்களின் அடியில் இறையவரை அமைத்துப் பழந் தமிழ்நாடு வழிபட்டது. குற்றாலநாதர் குறும் பலாவின் கீழ் அமர்ந்தார். நெல்வேலியப்பர் வேணு வின் அடியில் வீற்றிருந்தார். மதுரேசர் கடம்ப வனத்தில் களித் தமர்ந்தார். தில்லைவனத்தில் அழகிய கூத்தர் திளைத்தார். மரமடர்ந்த வனங்கள் பிற்காலத் தில் நகரங்களாகச் சிறந்தபொழுது குறும்பலா வனம் திருக்குற்றாலமாகவும், வேணுவனம் திருநெல்வேலி யாகவும், கடம்பவனம் மதுரையாகவும், தில்லைவனம் சிதம்பரமாகவும் திகழ்வனவாயின. முன்னாளில்

கல்லாலின் கீழ் அமர்ந்து இறையனார் அறமுரைத் தார். அரசமரத் தடியில் அமர்ந்து கௌதம புத்தர் அரிய உண்மைகளை அறிந்தார். அசோகமரத் தடியில் அமர்ந்து அருகனார் அறமுணர்ந்தார். கூவிளமரம் எப்பொழுதும் ஈசனுக்கு உகந்ததாகும். இன்னும் வன்னியும் தென்னையும், மருதும் நாவலும், மற்றைய மரங்களும் இறையவர் விரும்பி உறையும் இடங்க ளாகும். வினைதீர்க்கும் விநாயகரை, வேம்பும் அரசும் கலந்து நிற்குமிடத்தில் அமைத்து வணங்கும் வழக்கம் இன்றும் தமிழ் நாட்டில் நிலவுகின்றது.

மரங்களைப் போலவே செடிகொடிகளும், புற் பூண்டுகளும் இறையவரோடு இணைந்து வாழும் தன்மை அறியத் தக்கதாகும். எப் பயனும் தாராத எருக்கும் குருக்கும் ஈசனுக்கினிய வென்றால், ஏனைய செடிகளைச் சொல்லவும் வேண்டுமோ ? தும்பையும் துளசியும், அறுகும் புல்லும் இறையவர்க்கு ஏற்றன வாம். மாயோன் துளசியில் மகிழ்ந் துறைகின்றான். ஆனைமுகத் திறைவனுக்கு அறுகினும் இனிய பொரு ளில்லை. ஆகவே, அறநெறியை அகிலமெலாம் பரப்பக் கருதிய தமிழ் மக்கள் உயிர்ப்பொருள் அனைத்தையும் இறையவரோடு இணைத்துக் காக்கக் கருதிய முறை நினைக்குந்தொறும் உள்ளத்தை நெகிழ் விப்பதாகும்.

## 29. சோலைமலைக் கள்ளன் *

தமிழ் நாட்டில் எத்தனையோ மலைகள் உண்டு. ஆயினும், மலையெல்லாம் சோலைமலை ஆகுமா? சோலைமலையைக் கண்டால் கண் குளிரும்; கருதினால் மனம் மகிழும். அம் மலையிலுள்ள பெருஞ்சோலையைப் பசுஞ் சோலை என்பார் ; பழம் உதிர் சோலை என்பார்; நறுஞ் சோலை என்பார். இன்னும் என்னென்னவோ சொல்லிப் புகழ்வார்.

செந்தமிழ்ப் பாமாலை பெற்ற சோலை மலையிலே மஞ்சு தவழும் ; மழை பொழியும் ; அருவி சொரியும் ; ஆறுகள் ஓடும். ஆற்றுநீர் கல்லின் இடையே பாய்ந்து செல்லும்போது 'கலீர், கலீர்' என ஒலிக்கும். அந்த ஓசையின் இனிமையால் சிலம்பாறு வலஞ்செய்யும் சோலைமலையில் கல்லும் மரமும் கதை சொல்லும்.

முன்னொரு காலத்தில் அருகரும் புத்தரும் அம் மலையிலே தங்கியிருந்து தவம் புரிந்தார்கள். அன்னார் இருந்த குகை இன்றும் மலைமீது காணப்படுகின்றது. இப்பொழுது 'பஞ்ச பாண்டவர் படுக்கை' என்பது அதன் பெயர். அங்கு ஏறிச் செல்வதற்குப் படியும் இல்லை ; பாதையும் இல்லை. இடுக்கு வழிகளில் நுழைந்தும், வழுக்குப் பாறையில் தவழ்ந்தும் வடுப் படாமல் பஞ்ச பாண்டவர் படுக்கையை அடைந்து

* ஆனந்த விகடன் தீபாவளி மலரில் எழுதியது.

விட்டால், நெஞ்சம் தழைக்கும்; தமிழ்த் தென்றல், 'வருக' என்று அழைக்கும்; தெள்ளிய சுனைநீர் தாகம் தீர்க்கும்.

அச் சுனையின் அருகே ஒரு பழங் குகை அமைந் திருக்கின்றது. அந் நாளில் அறவோர் இருந்து அருந் தவம் புரிந்த பள்ளி அதுவே போலும்! பெரிய ஆல மரம் ஒன்று அக் குகையின்மேற் கவிந்து அழகு செய்கின்றது. குகையின் உள்ளே படுக்கைபோல் அமைந்த பல பாறைகள் உள்ளன. ஒல்லென ஒலிக் கும் சோலையும், சில்லெனக் குளிர்ந்த சுனையும், சீலம் வாய்ந்த குகையும், அங்கே செல்வோரைச் செந்நெறி யிலே சேர்க்கும். ஒருமையுடன் இருந்து, இயற்கை யோடு இசைந்து இன்புற்று வாழ விரும்புவார்க்கு ஏற்ற இடம் அது.

தென்னாட்டில் சமண மதம் ஆதிக்கம் பெற்றிருந்த போது, சமண முனிவர் பல்லாயிரவர் அந் நாட்டில் வாழ்ந்தார்கள். மதுரையைச் சூழ்ந்திருந்த எட்டு மலைகளில் மட்டும் எண்ணாயிரம் முனிவர்கள் இருந் தார்கள் என்பர். அந்த எட்டு மலைகளில் ஒன்று சோலைமலை. அந் நாளில் 'இருங்குன்றம்' என்பது அதன் பெயராக வழங்கிற்று.

> " பரங்குன்று, ஒருவகம், பப்பாரம், பள்ளி,
> அருங்குன்றம், பேராந்தை, ஆனை—இருங்குன்றம்
> என்றுஎட்டு வெற்பும் எடுத்துஇயம்ப வல்லார்க்குச்
> சென்றுஎட்டு மோபிறவித் தீங்கு "

என்ற பழம் பாடல் அம் மலைகளின் பெருமையை எடுத் துரைக்கின்றது. அங்கு மாதவம் புரிந்த எண்ணாயிரம் சமண முனிவர்களும் தமிழ் நாட்டார்க்குக் கையுறை

யாகத் தந்த பாடல்களிற் சிறந்தவற்றைத் தொகுத்து நாலடியார் என்று பெயர் கொடுத்தனர்.

இவ்வாறு அருகர் போற்றிய சோலைமலை, என்றும் முருகனுக்கு உரிய திருமலையாகும். பொதுவாக மலைகள் எல்லாம் முருகனுக்கு உரியனவே யாயினும், சிறப்பு வகையில் அப் பெருமான் சோலைமலையை ஒரு படை வீடாகக் கொண்டுள்ளார் என்று அறிந்தோர் கூறுவர். பழமுதிர் சோலைமலையில் அமர்ந்து அருளும் குறிஞ்சிக் கிழவனாகிய குமரனை,

" சூரர் குலம் வென்று வாகை யொடுசென்று
சோலை மலைநின்ற—பெருமாளே "

என்று திருப்புகழ் பாடிற்று.

சோலைமலை பழங் காலத்தில் பாண்டியர்க்கு உரிய கோட்டையாகவும் விளங்கிற்று. பாண்டியர் அரசு வீற்றிருந்த தலைநகராகிய மதுரையின் வடகிழக்கே காதவழி தூரத்தில் உள்ளதாய், பத்து மைல் நீளமும் நாற்பது மைல் சுற்றளவும் உடையதாய்த் திகழும் அம் மலையைப் பாண்டியர் தம் காவற் கோட்டை யாக்கிக் கொண்டது சாலப் பொருத்த முடையதன்றோ? மலையத்துவசன் என்ற பாண்டியன் அக் கோட்டையைக் கட்டினன் என்பர். அந் நாளிலே கட்டிய உட்கோட்டை, வெளிக்கோட்டை ஆகிய இரண்டும் இன்றும் காணப்படுகின்றன. திண்ணிய மதில் அமைந்த சோலைமலையைக் கண்டு, கண்ணும் மனமும் குளிர்ந்தார் பெரியாழ்வார்; "மதிள் சூழ் சோலைமலைக்கு அரசே" என்று பாடினர்.

இத் தகைய படை வீட்டையும் கோட்டையையும் காத்து நின்றான் ஒரு வீரன். முறுக்கிய மீசையும், தருக்கிய விழியும் உடைய அவ் வீரன் இப்பொழுது காவல் தெய்வமாய், பதினெட்டாம்படிக் கறுப்பன் என்ற பெயரோடு சோலைமலையிலே காட்சி யளிக்கின்றான். அவனை நினைத்தாலே குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும்; படிறுடையார் உள்ளம் பறையடிக்கும். நீதிமன்றத்தில் தீராத வழக்குகளும் கறுப்பையன் படிக்கட்டில் தீர்ந்துவிடும்.

முருகனுக் குகந்த படைவீட்டிலே—கறுப்பையன் காக்கும் கோட்டை மலையிலே—ஒரு கள்ளனும் நெடுங்காலமாக உள்ளான்! அன்று இன்று எனாத படி, என்றும் அவன் உள்ளான் என்று ஆன்றோர் கூறுவர். கள்ளனும் அவனே; காப்பானும் அவனே! ஆதியும் அவனே; அந்தமும் அவனே! சோதியும் அவனே; சோலைமலை அரசனும் அவனே! அம்மாயக் கள்வனைக் கண்டு கொண்டார் ஞானக் கவிஞராகிய நம்மாழ்வார்.

"வஞ்சக் கள்வன் மாமாயன்
மாயக் கவியாய் வந்துஎன்
நெஞ்சும் உயிரும் அவையுண்டு
தானே யாகி நிறைந்தானே"

என்று பாடினார்; பரவினார்; பரவசமாயினார்; உள்ளம் கவர்ந்த கள்வனை நினைந்து உருகினார்; அவன் அழகைக் கண்ணாற் பருகினார்; இன்ப வாரியில் மூழ்கினார்.

இங்ஙனம் ஆழ்வாரது நெஞ்சிலே புகுந்து திருவாய்மொழி பாடுவித்த வஞ்சக் கள்வனே சோலைமலையில் நின்று அருளும் திருமால். அவர் பெருமையால்

சோலைமலை, "திருமால் இருஞ்சோலை" என்னும் பெயர் பெற்றது.

"திருமால் இருஞ்சோலை மலையென்றேன், என்ன,
திருமால் வந்துஎன் நெஞ்சு நிறையப் புகுந்தான்"

என்பது திருவாய்மொழி.

சோலைமலையுடைய திருமால், அழகர் என்னும் பெயருடையார். 'அழகும் அழகுடையார்க்கு ஆகும்' என்ற முறையில் சோலைமலை அவருக்கு உரியதாயிற்று. அழகர்மலை என்ற பெயரும் பெற்றது. இதை யெல்லாம் அறிந்து,

"அருகரோடு புத்தரும் அமர்ந்தருளும் சோலை
மருகனோடு மாமனும் மகிழ்ந்துறையும் சோலை
கருமையோடு வெள்ளையும்* கலந்திலங்கும் சோலை
அருமையான சோலைஎங்கள் அழகர்பெருஞ் சோலை"

என்று ஆடிப் பாடினள் சோலைமலைக் குறவஞ்சி. அச் சோலையிலே கள்ள அழகரைக் காண்பது ஓர் ஆனந்தம்!

* வெள்ளை—வெள்ளை நிறமுடைய பலதேவன். அவரும் கண்ணனோடு அம் மலையில் காட்சியளித்தார் என்பது பரிபாடலால் விளங்கும்.

# 30. தெய்வம் படும் பாடு *

தெய்வம் படும் பாடு தெய்வத்துக்குத்தான் தெரியும். அடியார் கையில் அகப்பட்டு எத்தனை அடியும் அவதியும் பட்டிருக்கிறது தெய்வம்! எத்தனை ஏச்சும் பேச்சும் கேட்டிருக்கிறது! தொண்டர் என்று பேர் படைத்த மிண்டர்களில் ஒருவன் தெய்வத்தைக் கல்லால் எறிந்தான்; மற்றொருவன் பிரம்பால் அடித்தான்; பித்தன் என்று ஏசினான் இன்னொரு தொண்டன்: "தொண்டர் தம் பெருமை சொல்லவும் அரிதே."

கும்பகோணத்திற்கு அருகே சத்தி முற்றம் என்ற சிற்றூர் உள்ளது. அங்குள்ள சிவாலயம் பாடல் பெற்றது. "சத்தி முற்றத்து உறையும் சிவக்கொழுந்தே" என்று பாடினார் திருநாவுக்கரசர். நாளடைவில் சத்தி முற்றம் என்ற பெயர் 'சத்தி முத்தம்' ஆயிற்று. அதிலிருந்து உருவெடுத்தது ஒரு காதற் கதை! சத்தியாகிய உமாதேவி ஈசனைக் காதலித்து முத்தமிட்ட இடம் அதுவே என்று முடிவு கட்டினார் சிவனடியார். அதற்கு அடையாளமாகச் சத்தி சிவனை முத்தமிடும் கோலத்தில் அமைந்த திருவுருவமும் அவ்வாலயத்தில் நிறுவப் பெற்றது. அடியார்மீது வைத்த கருணையால் சத்தியின் முத்தத்தையும் சகித்துக்கொண்டு அந்த ஆலயத்துள் அமர்ந்திருக்கின்றார் ஈசன்.

சோழ நாட்டிலுள்ள திருநாகேச்சுரத்தில் சிறந்த திருமால் கோவில் ஒன்றுண்டு. திருவிண்ணகர் என்பது அதன் பழம் பெயர். ஆழ்வார்களுள் நால்வர் அத் திருப்பதியைப் பாடியருளினர். "திருவிண்ணகர் சேர்ந்த அப்பன், தன் ஒப்பார்

---

* ஆனந்த விகடன் தீபாவளி மலரில் எழுதியது.

இல்லப்பன் ” என்று நம்மாழ்வார் பாடிப் போற்றி ஞர். அவர் திருவாக்கின் அடியாக ‘ஒப்பிலியப்பன்’ என்ற திருநாமம் அப் பெருமாளுக்கு அமைந்தது. காலப் போக்கில் ஒப்பிலியப்பன் என்பது ‘உப்பிலி யப்பன்’ என மருவிற்று. உப்பிலியப்பன் கோயில் என்ற பெயரும் அவ் விண்ணகருக்கு அமைந்தது. உப்பிலியப்பனுக்கு உப்பில்லாத நிவேதனமே உகந்தது என்ற கருத்துப் பரவலாயிற்று. அதன் விளைவாக இன்றும் உப்பில்லாத் திருவமுதை அப் பெருமாளுக்கு அளிக்கின்றுர்கள். ஒப்புவமை யில்லாத் தலைவன், அடியார் தரும் உப்பில்லாத உணவை யும் உட்கொண்டு, தியாகத்தின் திருவுருவாக அத் திருப்பதியிலே காட்சி தருகின்றுர்.

வருண ஜெபம் செய்தால் பருவ மழை பெய்யும் என்பது வைதிகக் கொள்கை. ஆயினும், மழை பெய் விப்பதற்குக் குறுக்கு வழி யொன்று சில ஊர்களிலே கையாளப்படுகின்றது. ஆற்றங்கரையில் அரசமரத் தடியில் அமர்ந்துள்ள பிள்ளையாருடைய மூச்சைப் பிடித்து விட்டால் மழை கொட்டும் என்பது கொச்சை யன்பர்களின் நம்பிக்கை. அதற்காகப் பிள்ளையாரைச் சுற்றிக் களிமண்ணுல் ஒரு கோட்டை கட்டுவர் ; தண்ணீரைக் கொண்டுபோய் அதில் கொட்டுவர் ; பிள்ளையார் கண் அளவிற்குத் தண்ணீர் நிறைந்த வுடன் மழைக் குறி ஏதேனும் தோன்றுகிறதா என்று விண்ணை நோக்குவர். கார்மேகம் ஒன்றையும் காணு விட்டால் அவரைச் சுற்றியுள்ள தண்ணீரில் காரமான மிளகாய்ப் பொடியைக் கரைப்பர். இவ்வாறு பாமர மக்கள் எடுக்கும் ‘மூச்சுப்பிடி’ விழாவில் சில வேளை

மழை பெய்வதும் உண்டு : இது பிள்ளையார் படும் பாடு.

தமிழ்நாட்டிலுள்ள சிறந்த திருக்கோவில்களுள் ஒன்று வைத்தீசுரன் கோவில். புள்ளிருக்கு வேளூர் என்பது அதன் பழம் பெயர். அங்குள்ள ஈசன் வைத்தியநாதன். மருத்துவருளெல்லாம் பெரிய மருத்துவன் ; வன்பிணியையும் தீர்க்க வல்லவன். "பிரிவிலா அடியார்க்கு என்றும் தீரா நோய் தீர்த் தருள வல்லான்" என்று திருநாவுக்கரசர் அப் பெருமானைப் பாடினார். பிறவி யென்னும் பெரும் பிணிக்கு ஏதுவாகிய "இருள் சேர் இரு வினையும்" துடைக்க வல்ல வைத்தியநாதனை 'வினை தீர்த்தான்' என்று பொது மக்கள் போற்றுவாராயினர். 'வினை தீர்த்தான்' என்ற பெயரைக் கேள்வியுற்றார் வசை பாடும் திறம் வாய்ந்த ஒரு கவிஞர். உடனே புறப் பட்டது வசைப் பாட்டு.

> "*வாதக்கா லாம்தமக்கு மைத்துனற்கு நீரிழிவாம்*
> *போதப் பெருவயிறும் புத்திரற்கு - மாதரையில்*
> *வந்தவினை தீர்க்க வகையறியான் வேளூரான்*
> *எந்தவினை தீர்த்தான் இவன் !*"

என்று கவிஞர் பாடிய பாட்டையும் வஞ்சப் புகழ்ச்சி யாக நெஞ்சார ஏற்றுக்கொண்டு வைத்தீசுரன் கோவிலில் வாழ்கின்றார் செஞ்சடைக் கடவுள்.

உமாதேவி மயில் வடிவாக இறைவனைப் போற் றிய இடம் மயிலாப்பூர் என்பர். அவ்வூரிலே அம்மன் கோவில் ஒன்று உள்ளது. முண்டக் கண்ணியம்மன் கோவில் என்பது அதன் பெயர். அன்பினால் வழிபடும் தொண்டர்களுக்கு முண்டக் கண்ணியாகவா காட்சி யளிப்பாள் உமை யம்மை ? கண்டோர் கண்களைக்

குளிர்விக்கும் கண்களல்லவோ அம்மையின் கண்கள் ? கருணை பொழியும் கண்கள் முண்டக் கண்களாக இருக்க முடியுமோ ? என்ற எண்ணமெல்லாம் நம் மனத்தில் எழுகின்றது. மயிலையில் வாழும் அவ் வம்மையின் உண்மையான பெயரை அறிந்தால் ஐயமும் திரிபும் அகன்று விடும். முண்டகக் கண்ணி என்பது அவள் பெயர் ; முண்டகம் என்பது தாமரை ; சிறப்பு வகையில் செந்தாமரையைக் குறிக்கும். அருளுருவாகிய அம்மையின் செவ்வரி படர்ந்த அழகிய கண்களை வியந்து முண்டகக் கண்ணி என்று ஆன்றோர் பெயரிட்டனர். அதை முண்டக்கண்ணியாகச் சிதைத்து விபரீதம் விளைத்து விட்டது நம் மக்களின் சிறுமை.

பழனி மலைக்கு அருகே அயிரை என்ற மலை ஒன்று உண்டு. அம் மலையிலே கொற்றவை கோயில் கொண்டாள். வெற்றி தரும் தெய்வமாகிய கொற்றவையை மன்னரும் வீரரும் முன்னாளில் வழிபட்ட செய்தி பதிற்றுப் பத்து முதலிய பழந்தமிழ் நூல்களிற் கூறப்படுகின்றது. நாளடைவில் அயிரைமலை என்பது ஐவர் மலையென மருவிற்று. பாண்டவர் ஐவருக்கும் உரியது அம் மலை என்ற கதை பிறந்தது. பெண் வடிவத்தில் காட்சியளித்த கொற்றவை "ஐவர்க்கும் தேவி அழியாத பத்தினி" என்று புகழப்படும் பாஞ்சாலியாயினாள். பாஞ்சாலியானாலும் பராசக்தியின் அருள் குன்றாது அம் மலையில் நின்று நிலவுகின்றது. இத்தகைய அரும் பெருங் கருணையை அறிந்தன்றோ,

"வெறுப்பனவே செய்யும் என் சிறுமையை நின்பெருமையினால்
பொறுப்பவனே"

என்று மனம் நெகிழ்ந்து பாடினார் மாணிக்க வாசகர் !

# VII. இருமையில் ஒருமை

## 31. ஆண்மையும் அருளும்

நினைப்பிற்கு எட்டாத நெடுங்காலமாக இம் மாநிலத்தில் மண்ணாலும் பெண்ணாலும் மறப் போர் நிகழ்ந்து வருகின்றது. உலகிலுள்ள மக்கள் ஒரு வயிற்றுப் பிறந்தாற்போல் ஒற்றுமையாக வாழத் தலைப்பட்டால், போர் ஒடுங்குமென்று மும்மையும் உணர்ந்த மூதறிஞர் கருதுகின்றார்கள். ஆறறிவுடைய மாந்தர் அமர்க்களம் புகுந்து, அடுபோர் புரிந்து குருதி சொரிவதை நினைக்கும்போது அறிஞர் நெஞ்சம் குலைவது இயல்பே யன்றோ? இதனாலேயே இந் நாட்டில் முறை திறம்பாது அரசாண்ட மன்னர்கள் மாறுபட்ட அரசரோடு மலைய நேர்ந்தக்கால் அறநெறி விலகாது அமர் விளைத்தார்கள்.

அருளும் ஆண்மையும் இனிதமைந்த பண்டை அரசர், மாற்றாரொடு போர் தொடங்கு முன்னே, மதி நலம் வாய்ந்த தூதுவரை அவர்பால் அனுப்பி நீதி பெற முயன்றார்கள். இவ்வாறு வெம்போர் விலக்கும்

விழுமிய கருத்துடன் வேற்றரசரிடம் தூது செல்லும் அறிஞரை அவமதிப்பதும் துன்புறுத்துவதும் ஆகா வென்று அரசநீதி முறையிடுகின்றது. அயோத்தி மன்னனுடைய தூதனாய் இலங்கை மாநகருக்குச் சென்ற அனுமன்மீது சீற்றமுற்று அவனைச் சிதைக்கக் கருதிய அரக்க மன்னனை நோக்கி, அறிவு வாய்ந்த வீடணன்,

"மாதரைக் கோறலும் மறுத்து நீங்கிய
ஆதரைக் கோறலும் அழிவு செய்யினும்
தூதரைக் கோறலும் தூய்தன் றும்என
ஏதுவிற் சிறந்தன எடுத்துக் காட்டினான்"

என்று கவியரசராகிய கம்பர் கூறுமாற்றால், தூதரைக் கொல்லும் பாவம், மாதரைக் கொல்லும் மாபெரும் பாவத்தை ஒப்பதாகும் என்பது நன்கு விளங்குகின்றது. இவ்வாறு தூது போக்கியும் நேர்மை எய்தாத நிலையிலேயே, அருள் நிறைந்த அரசர், வேறு வகையின்றி வெம்போர் புரிவார்கள்.

மாற்றரசர், செந்நெறி விலகி, சீர்முறை தவறிப் புன்மையே புரியினும், அவரது அடாத செய்கையைப் பொறுத்து, இயன்ற வரையில் போரைத் தடுக்க முயல்வதே அறம் திறம்பாத அரசர் செயலாகும். இத்தகைய பெருமை, அயோத்தி அண்ணலாகிய இராமனிடமும், குருகுல முதல்வனாய தருமனிடமும் தலைசிறந்து விளங்கிற்று. தாயின் மொழியைத் தலைக்கொண்டு, நாடு துறந்து காடு புகுந்த இராமனுடைய காதல் மனையாளை, இலங்கை வேந்தன் வஞ்சனையால் கவர்ந்து அசோக வனத்தில் வைத்தான். மங்கை

யைப் பிரிந்த மன்னன் மலையும் காடும் அலைந்து திரிந்து மதங்க வனத்தில் வானரத் தலைவனைத் துணைக்கொண்டு, கடல் சூழ்ந்த இலங்கையில் தன் காதலி சிறையிருந்ததை அறிந்து, கருங்கடலைக் கடப்பதற்குக் கல்லால் அணை அமைத்து, வானர சேனையோடு இலங்கையின் நகர்ப்புறம் எய்தினான். ஆயினும், தனக்குத் தவறிழைத்த இலங்கை வேந்தன் மீது போர் தொடங்கு முன்னே, அம் மன்னன், சீதையை விடுவானோ என்று அறியுமாறு அங்கதனை அவனிடம் தூதனுப்பக் கருதினான். இவ்வாறே சூதினால் அரசிழந்து, பன்னீராண்டு படர்கானகத்தில் துயர் உழந்து, அப்பால் ஓராண்டு ஒருவரு மறியாது ஊர் நடுவே கரந்து துறைந்து முடிந்த பின்னர், வழிக்கு வாராத வணங்காமுடி மன்னன் மீது படையெடுக்கு முன்னே குருகுல மன்னன் கண்ணனைத் தூதனுப்பிக் கடும்போர் விலக்கக் கருதினான்.

விதிக்கும் விதியாகும் வில்லைத் தாங்கிய இலக்குவனைத் துணைக்கொண்ட இணையற்ற இராமவீரன் இலங்கை நாதனுடைய புயவலியும் படைவலியும் கண்டு பயந்து அவன்பால் தூதனுப்பினான் அல்லன். அவ்வாறே தண்டேந்திய வீமனையும், தனுவேந்திய விசயனையும் துணையாகக் கொண்ட தருமன், நூற்றுவராய் விளங்கிய மாற்றார் படைவலி கண்டு கலங்கிக் கண்ணனைத் தூதனுப்பினான் அல்லன். கடும்போரால் விளையும் கொடுமையையும் கொலையையும் விலக்கக் கருதிய விழுமிய அருளாலேயே இருவரும் மானமும் கருதாது தூது போக்கினர் என்பது இனிதுவிளங்கும்.

அறம் நிரம்பிய தலைவரிடம் இத் தகைய கரை யிறந்த கருணையையும், வரையிறந்த பொறுமையை யும் கண்ட வலிமை சான்ற தம்பியர் சில வேளைகளில் வருந்த முற்றுக் கோபத்தாற் கொதித்தார்கள். மாற்றார் படையைக் கண்டு கலங்காத இளையோர் மூத்தோரது பண்பாட்டைக் கண்டு கலங்கினார்கள். மானத்தால் மனமிடிந்த தம்பியர், மாற்றரசரிடம் வில் லாட இசைந்தனரே யன்றிச் சொல்லாட இசைந்தா ரல்லர். 'தேவியை விடுகின்றானா அன்றி ஆவியை விடுகின்றானா' என்றறிந்து வருமாறு இராமன் தூதனுப்பத் துணிந்தபோது, எவர்க்கும் இளையாத இலக்குவன், தமையனை நோக்கி, "ஐயனே! இலங்கை அரக்கன் உன் தேவியைச் சிறையில் வைத்தான்; தேவரை இடுக்கண் செய்தான் ; அந்தணரை அலற வைத்தான் ; இந்திரனுக்கு இடர் விளைவித்தான் ; மாயம் விளைத்துச் சீதையை மயங்க வைத்தான்; சஞ்சலத்தால் நைந்த மங்கைக்கு 'அஞ்சேல்' என்று அபயமளித்த கழுகின் வேந்தனைக் கருணையின்றிக் கொன்றான். இத் தகைய பாவியின் ஆவியைப் போக் காது அருள் காட்டலாகுமோ?" என்று வெகுண் டுரைத்தான். அவ் வுரையை அமையக் கேட்ட அயோத்தி அண்ணல், புன்னகை பூத்து, "புயவலி அமைந்திருப்பினும் பொறையொடும் பொருந்தி வாழ்வதே ஏற்றதாகும் ; அதுவே அறமு மாகும்" என்று மாற்றம் உரைத்தான்.

இவ் வண்ணமே வம்பு செறிந்த வணங்காமுடி மன்னன்பால் கண்ணனைத் தூதனுப்பத் துணிந்த

போது தண்டேந்திய வீமன் தருமனை நோக்கி, "ஐயனே ! பன்னலம் திகழும் பாஞ்சாலி, பாவியர் கைப்பட்டு,

"ஆருகி இருதடங்கண் அஞ்செனவெம்
புனல்சோர அளகம் சோர
வேருன துகில்தகைந்த கைசோர
மெய்சோர வேருேர் சொல்லும்
கூருமல் கோவிந்தா கோவிந்தா
என்றுஅரற்றிக் குளிர்ந்து நாவில்
ஊருத அமிழ்தூற உடல்புளகித்து
உள்ளமெலாம் உருகி ஞளே."

அந் நிலையில் தலைகவிழ்ந்து பொறுத்திருந்து நமக்கும் நம் மரபினுக்கும் என்றும் தீராத வசை தந்தீர் ; அப் பால், பதின்மூன்ருண்டு காட்டிலும் நாட்டிலும் கழித்த பின்னரும் அமர் புரிந்து, மாற்றரசர் உடலம் துணித்து உலகாளக் கருதாது, இன்னும் தூதனுப்பிப் பணிந்து இரந்து புவி பெற்று உண்டு இருப்பதற்குத் துணிகின்றீரே ! அந்தோ ! அரவுயர்த்தோன் கொடு மையினும், முரசுயர்த்தோய்! உமது அருளுக்கு அஞ்சி னேன். ஐயோ ! இந்தத் தமையன், வாடுகின்ற மடப்பாவை வரம் முடித்தான் ; இளையவர் கூறிய வஞ்சினம் முடித்தான் ;

" மலைகண்ட தெனஎன்கை மறத்தண்டின்
வலிகண்டும் மகவான் மைந்தன்
சிலைகண்டும் இருவர்பொருந் திறல்கண்டும்
எமக்காகத் திருமால் நின்ற
நிலைகண்டும் இவள்விரித்த குழல்கண்டும்
இமைப்பொழுதில் நேரார் தம்மைக்
கொலைகண்டு மகிழாமல் அவன்குடைக்கீழ்
உயிர்வாழக் குறிக்கின் ருயே "

என்று கொதித்துக் கூறினன். அப்போது "அறநெறி யுணர்ந்த தருமனது உரைவழி நிற்றலே தக்கதாகும்" என்று கண்ணன் எடுத்துரைக்க, வெம்மை சான்ற வீமனும் அடங்கி நின்றான்.

அப்பால், போர் நிகழ்ந்தபோது மானத்தால் மனம் கொதித்த தம்பியைத் துணைக்கொண்டு அயோத்தி மன்னன் இலங்கைவேந்தனை வென்றான்; செம்மை தவறிய சுயோதனன் செயல்கண்டு சிந்தை யழிந்த தம்பியரைத் துணைக்கொண்டு, குருகுல வேந்தனும் மாற்றாரை வென்றான். அறம் திறம்பாத இவ்வரசர் இருவரும் பொறுமை யென்னும் பெருமைக் கோர் இருப்பிடமாய் இலங்கினர்; மாற்றார் சிறுமை செய்யினும் அச் சிறுமையைத் தம் பெருமையாற் பொறுத்து அறநெறியில் தலைநின்றனர்; பகைவரது மிகையால் போர் செய்ய நேர்ந்தபோதும், அறம் திறம்பாத முறையில் அமர் நிகழ்த்தினர்.

படைக்கல மிழந்து எளியராய் எதிர்ப்படும் பகைவரை, அருள் வாய்ந்த அரசர், எஞ்ஞான்றும் தமது படைக்கலத்தால் நலிவதில்லை. வெள்ளிமாமலை யெடுத்த இராவணன் படைக்கல மிழந்து, எளியனாய்த் தனக்கு எதிரே போர்க்களத்தில் நிற்கக் கண்ட கோசல நாட்டு வள்ளல், அருள் அளாவிய ஆண்மையோடு,

"ஆளை யாஉனக் கமைந்தன
　　மாருத மறைந்த
பூளை யாயின கண்டனை
　　இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன்"

என்று கவியரசர் கூறுமாறு பகையரசனுக்கு விடை கொடுத்தனுப்பினன்.

அவ்வாறே, வில்லாண்மையில் தலைசிறந்து விளங்கிய விசயன், போர்க்களத்தில் படைக்கலம் இழந்து எளியனாய் நின்ற கர்ணனது நிலைகண்டு தளர்ந்து, அவன் மீது அம்பெய்தலைத் தவிர்த்த ஆண்மை இராமனது உயரிய அருளை நிகர்ப்பதாகும்.

*" அன்று போர்புரி சேனை யின்பதி*
*யான வீரனை நீ*
*இன்று போய்இனி நாளை வாஎன*
*இனிதி யம்பினால்*
*வென்றி கூர்வரி வின்மை யால்அடல்*
*வெவ்வ ரக்கரை முன்*
*கொன்ற காளையை ஒத்த பேரிசை*
*கொண்ட ஆண்மையினன் "*

என்று வில்லி, விசயனது பெருமையைப் போற்றிப் புகழ்ந்தார்.

இங்ஙனம் இம் பாநிலத்தில் அறநெறி மறநெறியோடு மாறுபடும்பொழுது இறுதியில் அறமே வெல்லும் என்பது ஒருதலை. "பொறுத்தார் பூமி யாள்வார்" என்னும் பொய்யாமொழிக்குக் கோசல நாட்டு வீரனும் குருகுலக் குரிசிலும் இணையற்ற சான்றாவர்.

*" ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்*
*பொன்றும் துணையும் புகழ். "*
—திருவள்ளுவர்.

# 32. கர்ணனும் கும்பகர்ணனும்

தொன்று தொட்டுச் செய்ந்நன்றி யறிந்து ஒழுகு தலைச் சிறந்த அறமெனக் கடைப்பிடித்த நாடுகளில் தலை சிறந்தது தமிழ்நாடு. நன்றி மறப்பது நன்றன்று என்றும், நன்றல்லதை அன்றே மறப்பது நன்று என்றும் தமிழ் மறையாகிய திருக்குறள் கூறுகின்றது. இன்னும், காலத்தினாற் செய்த நன்மை சிறிதாயினும் அது ஞாலத்தின் மாணப் பெரிது என்றும், ஒருவன் தினைத்துணை நன்மை செய்யினும் அதைப் பனைத்துணையாய்க் கொள்ளுதலே பண்புடைமை யாகும் என்றும் அறநூல்கள் நன்றியின் பெருமையை நயம்படக் கூறுகின்றன.

" எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு "

என்று நாயனார் கூறிய அறிவுரையைப் பொன்போல் போற்றினர் தமிழ் மக்கள். இக் குறளில் அடங்கிய கருத்தை விரித்துரைக்கப் போந்த கம்பர்,

" சிதைவகல் காதல் தாயைத்
தந்தையை, குருவை, தெய்வப்
பதவிஅந் தணரை, ஆவைப்
பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கும் உண்டாம்
மாற்றலா மாற்றல், மாயா
உதவிகொன் றார்க்குஎன் றேனும்
ஒழிக்கலாம் உபாய முண்டோ ?"

என்று நன்றியின் பெருமையை நன்கெடுத்துரைத் தார். முன்னறி தெய்வமாய தாயையும், தந்தையை யும், அறியாமையை அகற்றும் ஆசானையும், அறம் திறம்பாத அந்தணரையும், பயன் உவந்தளிக்கும் பசுவையும், பாவம் ஒன்றறியாப் பாலரையும், மெல்லி யல் வாய்ந்த மாதரையும் கொலை புரியும் கொடியருக் கும் அறநூல்களில் கழுவாய் உண்டு; ஆனால், செய்ந் நன்றி சிதைத்தோர்க்கு எஞ்ஞான்றும் உய்யும் வழி யில்லை என்று கம்பர் அருளிய பொருளுரை அறிந்து போற்றுதற் குரியதாகும். முந்தித் தவங் கிடந்து, முன்னூறு நாள் சுமந்து, அந்தி பகலாய் இறைவனை வந்தித்துப் பெற்றெடுத்த அன்னையைக் கொன்ற அரும் பாவமும் அகன்றுவிடலாம். 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்று தக்கோர் போற்றும் பெருமை வாய்ந்த பிதாவைக் கொன்ற பிழையும் தீர்ந்து விடலாம். இருமுது குரவர்க்கும் அடுத்த நிலையில் அமைந்து, அஞ்ஞான இருளகற்றும் ஆசிரி யரைக் கொன்ற பாவமும் ஒழிந்து விடலாம். மண் ணுலகில் வாழும் எல்லா உயிர்களிடத்தும் செந் தண்மை பூண்டு நெறிமுறையில் ஒழுகும் அந்தணரைக் கொன்ற அரும் பாவமும் நீங்கிவிடலாம். மாநிலத்தில் வாழும் மக்கட்கெல்லாம் அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந்து அமுதளிக்கும் ஆவைக் கொன்ற பாவமும் அழிந்து விடலாம். இறைநலம் மாறாத இளம் பாலரையும் மெல்லியல் வாய்ந்த மாதரையும் கொன்ற கொடும் பாவமும் குறைந்து ஒழிந்துவிட லாம். ஆனால், செய்ந் நன்றி மறந்தோர் எக் காலத் தும் எவ்வாற்றானும் அப் பாவத்தினின்றும் தப்பிப்

பிழைத்தல் இயலாததாகும் என்று வள்ளுவர் கருத்தைக் கம்பர் விரித்துரைத்தார். 'உப்பிட்ட வரை உள்ளளவும் நினை' என்றும், 'உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்தல் ஆகாது' என்றும், தமிழ் நாட்டில் வழங்கிவரும் பழமொழிகளே, இந் நல்லறம் நெடுங் காலமாகப் போற்றப்பட்டு வருவ தற்குப் போதிய சான்றாகும்.

செய்ந்நன்றி அறிதலென்னும் செம்மை சான்ற தொல்லறம் அங்கநாட்டு அரசனாய கர்ணனிடமும், இலங்கைநாட்டு வீரனாய கும்பகர்ணனிடமும், தலை சிறந்து விளங்கிற்று. கர்ணன், கன்னியாயிருந்த குந்திதேவியின் மைந்தனாய்த் தோன்றினன். கன்னிப் பருவத்திலே பிறந்த மைந்தனையும், அவனை உயிர்த்த அன்னையாய தன்னையும் உலகோர் பழிப்பர் என்று உன்னி, அழகிய மைந்தனை ஒரு பேழையில் அடைத்து ஆற்றில் விட்டாள் அம் மங்கை. ஆதரவற்று ஆற்றில் மிதந்து வந்த மைந்தன், ஒரு தேர்ப் பாகன் கையிற் சேர்ந்து, அவன் மனையில் வளர்பிறைபோல் வளர்ந்து வந்தான். இளமையிலேயே வீரமும் அழகும் வாய்ந்து விளங்கிய கர்ணனைக் கண்ட துரியோதனன்,

" கற்றவர்க்கும் நலனிறைந்த
கன்னியர்க்கும் வண்மைகை
உற்றவர்க்கும் வீரரென்று
உயர்ந்தவர்க்கும் வாழ்வுடைக்
கொற்றவர்க்கும் உண்மையான
கோதில்ஞான சரிதராம்
நற்றவர்க்கும் ஒன்றுசாதி
நன்மைதீமை இல்லையால் "

என்றபடி அவ் வீரனை ஆதரித்து வளர்த்து, அங்க நாட்டுக்கு அரசனாக்கி, அவனுடன் தோழமை கொண்டான் ; தன் தம்பியரும் சுற்றமும் அவன் அடி வணங்குதற்குரிய தோற்றமும் ஏற்றமும் அளித்தான். அநாதையாக ஆற்றில் மிதந்து வந்த தன்னை அன்போடு எடுத்து வளர்த்து, அரசுரிமையும் அளித்து, அயலார் மதிக்குமாறு அரும் பதவியும் நல்கிய துரியோதனனைக் கர்ணன் அருமையாய்ப் போற்றினான்.

பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் கடும்போர் நிகழும் என்றறிந்த கண்ணன், அறநெறி துறந்த துரியோதனன் படையில் ஒப்புயர்வற்ற வீரனாக விளங்கிய கர்ணனை எளிதில் வெல்ல முடியாது என்பதை உணர்ந்தான் ; ஆதலால், அவனை ஐவரோடும் சேர்க்க விரும்பினான் ; அதன் பொருட்டுக் குந்திதேவியைக் கர்ணனது மாளிகைக்கு அனுப்பினான். கர்ணனும் அப் பெருமாட்டியை அன்பினால் இன்புற வணங்கி ஆசனத் தமர்த்தினான். அப்போது குந்திதேவி தன் மைந்தனைக் குழைந்து நோக்கி, " ஐயனே, யானே உன்னை ஈன்ற தாய் ; கதிரவன் அருளால் என்பால் நீ பிறந்தாய் ; பழியஞ்சி உன்னைப் பேழையில் விடுத்தேன்" என்றுரைத்துப் பால்சோர நின்றாள். கர்ணனும் தன் அன்னை அவளே என்று ஐயமற அறிந்தான். அந் நிலையில், வீர மைந்தனை அன்போடு அணைத்து, பொன்முடி மோந்து, ' ஐயனே ! உன்னை அருமையாக வளர்த்தெடுக்க நல்வினை செய்திலேன் ; ஆயினும்,

" வருகஎன் மதலாய், இளைஞர் ஐவரும்நின்
மலரடி அன்பினுல் வணங்கும்
உரிமையால் மணம்ஒத்து ஏவலைபுரிய
ஒருதனிச் செய்யகோ லோச்சி
அரசெலாம் வந்துன் கடைத்தலை வணங்க
ஆண்மையும் செல்வமும் விளங்கக்
குருகுலா திபர்க்கும் குரிசிலாய வாழ்வு
கூர்வதே கடனெனக் குறித்தாள்."

'வருக, என் பிள்ளாய்; உன் தம்பியர் ஐவரும் அன்பினுல் வணங்கி ஆட்செய்ய, நீயே அரசனுய் அமர்ந்து ஆண்மையும் செல்வமும் விளங்கச் செங்கோல் செலுத்துவாயாக' என்று மொழிந்தாள் குந்தி தேவி.

"தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை" என்னும் அமுத வாக்கைக் கர்ணன் நன்கு அறிந்தவனே யாயினும், சுயோதனன் தனக்குச் செய்த பெருநன்றியை மறந்து அன்னையின் உரைவழி நடக்க இசையா னயினுன்;

" இடம்படுத் திடுவேல் இராசரா சனுக்குச்
செருமுனைச் சென்றுசெஞ் சோற்றுக்
கடன்கழிப் பதுவே எனக்குஇனிப் புகழும்
கருமமும் தருமமும் என்றுன்."

"எனக்கு நன்றி செய்த துரியோதன மன்னனுக்காக அமர்க் களத்திற் சென்று போர் புரிவதே அறமும் புகழும் ஆகும். அவன் உணவை யுண்டு வளர்ந்த யான், செஞ்சோற்றுக் கடன் கழியாது என் தம்பியருடன் சேரேன்" என்று கர்ணன் எடுத்துரைத்த வீரமொழிகளில் அவனது நன்றி மறவாத

நலத்தினை நன்கு காணலாம். பாண்டவர் தன் தம்பி யர் என்று கருதிப் பரிவு கொள்ளாது, தாயின் மொழியைப் போற்றுதலே தக்க தென்றும் எண்ணாது, செய்ந்நன்றி யறிதலே செம்மை சான்ற அறம் எனத் துணிந்து, அவ்வற நெறியில் நின்று, அமர்க் களத் தில் ஆவி துறந்த கர்ணனது அருங்குணம் போற்று தற் குரியதன்றோ ?

இவ்வாறே இலங்கை வேந்தனுடைய தம்பி யாய்த் தோன்றிய கும்பகர்ணன், வரத்திலும் வலிமை யிலும் சிறந்து விளங்கினான். கூற்றையும் ஆடல் கொண்ட அவ் வீரன் அறநெறியை ஆதரிக்கும் நீர்மை வாய்ந்தவன் ; அயோத்தி மன்னனுடைய மனையாளாய சீதையை இலங்கை நாதன் கவர்ந்து சிறை வைத்தது அடாத செயல் என்று அவனிடம் எடுத்துரைத்தான் ; பிறன்மனை நயந்த தமையனது செயல் தவறு என்று இடித்துரைத்து அவனைத் திருத்த முயன்றான் ; ஆயினும், தீராத மோகம் கொண்ட தமையனைத் திருத்துதல் இயலாதென் றறிந்தபோது, அவனுக்குத் துணையாக அமர்புரிந்து ஆவி துறப்பதே ஏற்றதாகும் என்றெண்ணிப் போர்க் களம் புகுந்தான். கும்பகர்ணனுடைய நீர்மையையும் திறமையையும் அறிந்த இராமன் அவ் வீரனைத் தன் பால் இழுத்துக் கொள்ளுமாறு விபீஷணனை அனுப்பி னான். அவனும் கும்பகர்ணனை அடைந்து, அடி பணிந்து, " ஐயனே ! எனக்கு இன்னருள் சுரந்த இராமவீரன் உனக்கும் அபயமளிப்பான்; மாயப் பிறவி நோக்கும் மருந்தாக அமைவான். எனக்கு அவன் தந்த இலங்கை யரசும் செல்வமும் உனக்கு யான்

தருவேன்; ஆதலால் தீவினை புரியும் தமையனைத் துறந்து அற நெறியாய இராமனைச் சேர்தலே அறிவுடைய உனக்கு அழகாகும்" என்று நீதியின் நேர்மையை எடுத்துரைத்தான்.

அது கேட்ட கும்பகர்ணன் மனம் வருந்தித் தம்பியை நோக்கி, "ஐய, நீரிற் குமிழிபோல் நிலையற்றதாகிய இவ் வுலக வாழ்வை விரும்பி, இராவணன் எனக்குச் செய்த பெரு நன்றியை மறப்பேனே? நெடு நாளாக என்னை வளர்த்துப் போர்க்கோலம் செய்து, இங்கனுப்பிய இலங்கை நாதனுக்கு உயிர் கொடாது பகைவர் பக்கம் போவேனே? இலங்கையின் பெரு நிதியை விரும்பி என் தமையனது உயிரை வாங்கும் பகைவனைப் பணிந்து இரந்து பதவி பெற்று இருத்தல் எனக்கு ஏற்ற தன்று. நீ சொல்லிய நீதி முறையனைத்தும் உனக்குத் தக்கதே" என்று வீரமொழி புகன்று, தம்பிக்கு விடைகொடுத்து அனுப்பினான். தன் தலைவன் தகாத செயல் செய்து நெடும் பகை தேடினான் என்று நன்றாய் அறிந்திருந்தும், இராம வீரனது இணையற்ற கணையால் தான் ஆவி துறப்பது திண்ணம் என்று தெரிந்திருந்தும், ஆவியையும் அளவிறந்த செல்வத்தையும் வெறுத்து, தமையன் பொருட்டு உயிர் துறந்த வீரனது மனநலம் வியந்து போற்றுதற் குரியதன்றோ? ஆகவே, கர்ணனும் கும்பகர்ணனும் செய்ந்நன்றி யறிதலாகிய அறத்தை ஆவியினும் அருமையாக ஆதரித்த வீரர் என்பது இனிதுணரப்படும்.

# 33. காளத்தி வேடனும் கங்கை வேடனும்*

தமிழ்நாட்டுக் காளத்தி மலையிலேயே தோன்றினான் ஒரு வேடன். வடநாட்டுக் கங்கைக் கரையிலே பிறந்தான் மற்றொரு வேடன். அவ் விருவராலும் வேடர் குலம் பெருமை யுற்றது. காளத்தி வேடனைக் கண்ணப்பன் என்றும், கங்கை வேடனைக் குகன் என்றும் இலக்கிய உலகம் போற்றும். இருவரும் உயரிய அன்பு நெறியைக் கடைப்பிடித்து அழியாப் புகழ் பெற்றனர்.

காளத்திநாதன்பால் வைத்த அன்பினால் தன் கண்ணையும் பெயர்த் தெடுத்த கண்ணப்பன் பெருமை தமிழ்நாடெங்கும் பரவிநின்றது. எல்லையற்ற அன்பிற்கு அவ் வேடர் பெருமானை எடுத்துக்காட்டாயினர்.

*"கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்*
*என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட் கொண்டருளி*
*வண்ணப்ப ணித்தென்னை வாவென்ற வான்கருணைச்*
*சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ"*

என்று வண்டை நோக்கிப் பாடும் பான்மையில் கண்ணப்பனது எல்லையற்ற அன்பின் திறத்தினை மாணிக்க வாசகர் நன்கு விளக்கியுள்ளார். திருவாசகத்திலும் தேவாரத் திருப்பாசுரங்களிலும் கண்ணப்பன் பெருமை பேசப்படுதலால் சைவ சமயத்தை நிலை நிறுத்திய நால்வருக்கும் அவன் முந்தியவன் என்பது

---

* நேமத்தான்பட்டி, திருநாவுக்கரசு வித்தியாசாலையின் பதின்மூன்றாவது ஆண்டு விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.

நன்கு விளங்குகின்றது. . காளத்தி நாதனை வணங்கிய திருஞான சம்பந்தர் கும்பிட்ட பயன் காண்போர் போல் வேடர் பெருமானாகிய கண்ணப்பனைக் கை தொழுதாரென்று சேக்கிழார் அழகாக எழுதிப் போந்தார்.

கவிக்கு நாயகராகிய கம்பர் இராம கதையை வடமொழிக் காவியத்தினின்றும் எடுத்துக்கொண்டாரேனும் அதனைத் தமிழ் நாட்டாருக்கு ஏற்ற முறையில் புதுக்கி இனியதொரு விருந்தாக அளித்துள்ளார். இராமனிடம் அன்பு பூண்ட கங்கை வேடனை உருவாக்கும் பொழுது, கம்பர் உள்ளத்தில் காளத்தி வேடன் வடிவம் கனிந்து இலங்கிற்று. காளத்தி வேடனைக் கருவாகக் கொண்டு கங்கை வேடனாய குகனை அவர் வார்த்து வடித்துள்ளாரென்று தோற்றுகின்றது. இதற்கு இரண்டொரு சான்றுகள் காட்டுவேன் :

கோசல நாட்டு இளவரசனாகிய இராமன், தாயின் சொல்லைத் தலைக்கொண்டு, தனக்குரிய நாடு துறந்து கங்கைக் கரையை வந்தடைந்தான் என்று அறிந்த குகன் அக் குரிசிலைக் காணப் புறப்பட்டான். வான்மிக முனிவர் எழுதிய வடமொழிக் காவியத்தில் குகன் இராமனைக் காணப் புறப்படும் கோலம், ஓர் அரசன் மற்றோர் அரசனைக் காண எழுகின்ற தன்மையில் அமைந்திருக்கின்றது. ஆனால் கம்பர், ஆண்டவனைக் காணச் செல்லும் அடியவனாகக் குகன் கோலத்தைத் திருத்தி யமைத்துள்ளார்.

" தேவா நின்கழல் சேவிக்க வந்தனன்
நாவாய் வேட்டுவன் நாயடியேன் "

என்று குகனே கூறுதலால் இவ் வுண்மை விளங்கும்.

காளத்தி வேடன் தனக்கினிய இறைச்சியே தன் தலைவனாகிய இறைவனுக்கும் இனியதாகும் என்று எண்ணி அதனை எடுத்து ஊட்டியவாறே குகன் தனக்கினிய கங்கையாற்று மீனையும் கொம்புத் தேனையுமே எடுத்துக்கொண்டு சென்றான். அவ் விரண்டையும் இராமன் திருமுன்பு வைத்து, "ஐயனே! தேனும் மீனும் திருத்திக் கொணர்ந்தேன். தேவரீர் திருவமுது செய்தருளல் வேண்டும்" என்று இறைஞ்சி நின்றான். அச் செயல் நிகழும்போது இராமனுடன் விருத்த மாதவர் சிலர் உரையாடிக்கொண் டிருந்தனர். அவர்கள் குகனது மனப்பான்மையை அறியாதவராய், தகாத பொருள்களை வேடன் எடுத்துவந்து அபசாரம் செய்து விட்டான் என்றெண்ணி வெறித்து நோக்கினர். அவர்கள் மனத்தில் நிகழ்ந்த கருத்தினை அறிந்த இராமன்,

> "அரியதாம் உவப்ப உள்ளத்து
> அன்பினால் அமைந்த காதல்
> தெரிதரக் கொணர்ந்த என்றால்
> அமுதினும் சீர்த்த வன்றே"

என்று விருத்த மாதவரைத் தெருட்டி யருளினான். இதற்கு நேரான செயல் கண்ணப்பன் சரித்திரத்தில் உண்டு. கண்ணப்பனுக்கு இனிய காளத்தி நாதனை சிவகோசரியார் என்னும் வேதியர் முறைப்படி பூசனை செய்து வந்தார்; கண்ணப்பன் இறைச்சியைக் கொண்டு திருக்கோயிலில் இட்டதைக் கண்டு செய்வ தொன்றறியாது கவலைகொண் டிருந்தார். அதை உணர்ந்த இறைவன் அவர் கனவிலே தோன்றி,

"அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீயென் றருள்செய்வார்"

இது சேக்கிழார் பெருமான் திருவாக்கு.

காளத்தி நாதன்பால் அன்பு பூண்ட கண்ணப்பனைப் போலவே குகனும் இராமனைப் பிரிந்திருக்க லாற்றாத மனப்பான்மை பெற்றான். அந்தி மாலை வந்தடைந்தபொழுது இராமன் குகனை நோக்கி, "அப்பா! இன்றிரவு உன் ஊருக்குச் சென்று, நாளைக் காலையில் கங்கை யாற்றைக் கடப்பதற்குப் படகுகள் கொண்டு வருக" என்று சொல்லிய பொழுது, குகனுடைய மனம் அனலிடைப்பட்ட மெழுகுபோல் உருகுவதாயிற்று. 'என் ஐயன், என் ஆண்டவன், என்னைப் போ என்றானே! அவனை விட்டு நான் எவ்வாறு போவேன்? அவனுடனிருத்தலே எனக்குப் பேரின்பம். அவனைப் பிரிந்திருத்தல் பெருந்துன்பம்' என்று எண்ணி இராமனை நோக்கி, "ஐயனே! நான் போகலாற்றேன்; ஈண்டிருந்து என்னாலியன்ற தொண்டு செய்வேன்" என்றான்.

"கார்குலாம் நிறத்தான் கூறக்
காதலன் உணரக் கூறி வான்றிப்
பார்குலாம் செல்வ நின்னை
இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வ னேன்யான்
இன்னலின் இருக்கை நோக்கித்
தீர்கிலேன் ஆன தைய
செய்குவென் அடிமை என்றான்"

என்று குகன் பெருமையை அறிவிக்கும் கம்பர் பாட்டு மிக்க அழகு வாய்ந்ததாகும்.

"என் பெருமானே! அயோத்திமா நகரில் அரியாசனத்தில் மன்னர் மன்னனாய் மணிமுடி தரித்துச் செங்கோலேந்தி அரசாளும் கோலத்தில் காண வேண்டிய உன்னைச் சடைமுடியும் மரவுரியும் தரித்துக் கானகப் புல்லில் அமர்ந்திருக்கக் கண்டேனே! என் கண் செய்த பாவம் கடலினும் பெரிதன்றோ? இந்தக் கோலத்தில் உன்னைக் கண்ட என் கண்களைப் பறித்தெறியாத பாவியேன் நான். ஆயினும், ஐயனே! உன்னை விட்டுப் போக என்னால் இயலாது; என்னாலியன்ற சிறுதொண்டு செய்து கொண்டு ஈண்டுத்தான் இருப்பேன்" என்று மனங் கசிந்து பேசினான். கங்கை வேடன் பேசிய வாசகத்தின் சுவையை அறிந்த இராமன்,

"சீதையை நோக்கித் தம்பி
திருமுகம் நோக்கித் தீராக்
காதலன் ஆகும் என்று
கருணையின் மலர்ந்த கண்ணன்
யாதினும் இனிய நண்ப
இருத்திஈண்டு எம்மோ டென்றான்."

"யாதினும் இனிய நண்ப" என்று அழைத்தமையால் குகன் இராமனுக்குப் பொன்னினும் இனியன் ஆனான்; புகழினும் இனியன் ஆனான்; மற்றெதனினும் இனியன் ஆனான் என்பது வெளிப்படையாக விளங்குகின்றது. இங்ஙனம் ஆட்கொள்ளப்பட்ட குகன் அகமும் முகமும் மலர்ந்தான். அன்றிரவு நாணற் பாயலில் இராமனும் சீதையும் படுத்துறங்க,

இலக்குவன் வில்லை யூன்றிய கையோடு அவ் விருவரையும் காத்து நிற்க, அன்பு வடிவாய குகன் முறையாக மூவரையும் காத்து நின்ருன். இரவு முழுவதும் கண்ணிமையாது காவல்செய்த குகன், இன்பப் பணியிலே ஈடுபட்டான். காளத்தி நாதனை இராப்பொழுதில் கண்ணிமையாது காத்துநின்ற கண்ணப்பனைப் போலவே இராமனைக் காத்துநின்ருன் குகனும்.

இன்னும் காளத்தி வேடனது அன்பிற்கும் கங்கை வேடனது அன்பிற்கும் ஒரு சிறந்த ஒற்றுமையுண்டு. இருவரும் இறைவனிடம் பயன் கருதாப் பக்தி பூண்டவர்கள் ; 'கூடும் அன்பினில் கும்பிடுதல் தம் கடன்' என்று கொண்டவர்கள். இத் தகைய பக்தியே சாலச் சிறந்தது என்று சான்ருேர் கூறுவர். இராமன், நாடு துறந்து காடு புகுந்த பின்னர் அவன்பால் அன்பு கொண்டவர் மூவர். கங்கைக் கரையிலே குகன் இராமனைச் சேர்ந்தான் ; கிஷ்கிந்தையில் சுக்ரீவன் வந்து சேர்ந்தான் ; இலங்கையில் விபீஷணன் வந்து அடைந்தான். தன்னை வந்தடைந்த மூவரையும் தன்னுடைய குடும்பத்திலே சேர்த்துக்கொண்டான் இராமன். எனினும், சுக்ரீவன் இராமனிடம் அன்பு பூண்டதற்குக் கைம்மாருகக் கிஷ்கிந்தை அரசைப் பெற்ருன். விபீஷணன் இராமனைச் சரணடைந்து இலங்கையரசைப் பெற்ருன். குகன் ஒருவனே பக்திக்காகப் பக்தி செய்து கைம்மாறு கருதாத அன்பின் நீர்மையை நன்கு விளக்கிக் காட்டினன்.

இவ்வாறு கனிந்த அன்பு வாய்ந்த காளத்தி வேடனையும், கங்கை வேடனையும் குறிக்கோளாகக் கொண்டு இறைவனை நினைந்துருகிய அன்பர் நிலையும் அறியத் தக்கதாகும். அன்பைப் பெருக்கி இன்பப் பேறடையக் கருதிய ஆன்றோர் இவ் விரு அடியாரது அன்பின் பெருமையை நினைந்து, “எற்றே இவர்க்கு நாம்!” என்று உள்ளம் உருகினர்.

முற்றத் துறந்த பட்டினத்தடிகள் என்று தமிழகம் போற்றிப் புகழும் பெரியார், கண்ணப்பனது அருஞ் செயலை நினைந்து கரைந்து உருகுவாராயினர். காளத்தி மலையி லமர்ந்த ஈசனுக்கு ஆளாகக் கருதிய அடிகள்,

“வாளால் மகவரிந்து ஊட்டவல் லேனல்லன் மாதுசொன்ன
சூளால் இளமை துறக்கவல் லேன்அல்லன் தொண்டுசெய்து
நாளாறில் கண்ணிடந்து அப்பவல் லேனல்லன் நான்இனிச்
சென்று
ஆளாவ தெப்படியோ திருக் காளத்தி அப்பருக்கே”

என்று அகம் குழைந்தார். “ஐயோ! பெற்ற பிள்ளையை வாளாலரிந்து இறைவனுக்கு இன்னமுதூட்ட வல்லேனோ? திருநீலகண்டன்மேல் மனையாள், வைத்த ஆணை கடவாது இளமையிலேயே ஐம்பொறிகளையும் வென்று, இன்பம் துறக்க வல்லேனோ? ஆறு நாள் பழகிய பான்மையில் ஆறாத அன்பு வாய்ந்து கண்ணைப் பறித்து, இறைவன் கண்களில் அப்ப வல்லேனோ? இத் தகைய பொக்கனாகிய யானும், மெய்யடியார்போல் நடித்து, வீடகத்தே புகுந்திட விழைகின்றேன்” என்று உள்ளத் துறவமைந்த உயரிய அடிகள் உருகுவாராயினர். கடந்தோர்க்கும் கடத்த

லரிதாய மக்கட் பாசம் நீத்த ஒரு தொண்டர், பெரிய சிறுத் தொண்டராய்ப் பேறு பெற்றார். மனையாள்மீது வைத்த பாசம் துறந்த மற்றொரு தொண்டர் இறைவனது அன்பிற்குரியராயினார். கண்ணிற் சிறந்த உறுப்பில்லை என்றறிந்தும், ஈசன்பால் வைத்த அன்பினால், இரு கண்களையும் ஈர்த்தளிக்க இசைந்த ஒரு தொண்டர் மாறிலா இன்பத்தில் மகிழ்ந்தார். இவ்வாறு அகம் புறமென்னும் இருவகைப் பற்றையும் அறவே களைந்து, இறைவன்பால் அன்பை வளர்த்த அடியாரது நிலையை நினைந்து பட்டினத்தடிகள் உருகும் பான்மை அறிந்து போற்றத் தக்கதாகும்.

காளத்தி வேடனைக் குறிக்கோளாகக் கொண்டு அடிகள் கரைந்துருகியவாறே, கங்கை வேடனை இலக்காகக் கொண்டு, வானர வேந்தனான சுக்ரீவன் வாடி வருந்தினான். இருமையும் தரும் பெருமானாகிய இராமனிடம் எப் பயனையும் கருதாது விழுமிய அன்பு பூண்ட வேடனது பெருமையையும் தனது சிறுமையையும் நினைத்துச் சுக்ரீவன் சிந்தை தளர்ந்தான். வானரசேனை இலங்கைமா நகர்ப்புறம் எய்தியபோது, அப் படையின் திறன் அறியுமாறு தன் நகரில் நின்று நோக்கிய இலங்கை வேந்தனைக் கண்டான் வானர மன்னன். அவன் உள்ளத்தில் சீற்றம் பொங்கி எழுந்தது; பஞ்சின் மெல்லடிப் பாவையாகிய சீதையை வஞ்சனையாற் கவர்ந்து, சிறை வைத்த அரக்கர்கோனைக் கொன்று பழி தீர்க்கக் கருதி அவன் மீது பாய்ந்தான். வீரராகிய இருவரும் நெடும் பொழுது கடும் போர் விளைத்தார்கள். இலங்கை

